# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்
நெல்வளமே நாட்டின்வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 2 விளைச்சல் : 17 திருவள்ளுவர் ஆண்டு 2052 அக்டோபர்த் திங்கள் - 2021












## உள்ளே...

1. இன்றைய கலைச் சொல்லாக்கம் நாளைய மொழிவளம்
2. ஆடைகளுக்கான கலைச்சொற்கள்
3. புலம்பெயர் நாடுகளில் தமிழ் அகராதியியல்;வேறுபட்ட பார்வை
4 THINGS AS CERTAIN AS DICTIONARIES AND TAXES, CAN BE MORE FIRMLY BELIEV'D (WITH APOLOGIES TO DANIEL DEFOE)
5. சமற்கிருத மலையை அசைத்த தமிழ்
6. தமிழ் தந்த Game
7. உலக அகராதி தினம்
8. திராவிடப் பண்பாட்டில் ஒற்றுமை காட்டும் சொற்கள்
9. எழுகுளிர்
10. திரைகடல் ஓடி சொற்களைத் தேடி
11. பேச்சுவழக்கும் இலக்கிய வழக்கும்
12. றொபேர் அகராதியின் ஆன்மா நினைவுநாள்




# ஆடைகளுக்கான கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| 1.Pant | - | முழுக்கால் சட்டை |
| 2.Shirt | - | சட்டை |
| 3.Jeans | - | முரட்டாடை / வன்துணி |
| 4.Coat | - | குப்பாயம் / மேலுடுப்பு |
| 5.Safari | - | ஒப்புடை |
| 6.Saree | - | புடவை |
| 7.Leggin | - | காலொட்டி |
| 8.Midi | - | அரையாடை |
| 9.Frock | - | ஒருங்குடை |
| 10.Formal dress | - | இயல்புடை |
| 11.Silk saree | - | பட்டுப்புடவை |
| 12.Jibba | - | நெட்டுடை |
| 13.Jacket | - | மேற்சட்டை |
| 14.Diaper | - | அணையாடை |
| 15.Trousers | - | அரைக்காற் சட்டை |
| 16.Churidars | - | இறுக்கக் காற்சட்டை |
| 17.Nightie | - | இரவு ஆடை |
| 18.Sleeveless | - | கையில்லா மேலாடை |
| 19.Fancy dress | - | புனைவுரு ஆடை |
| 20.T-shirt | - | கவைச்சட்டை |
| 21.Readymade dress | - | ஆயத்த ஆடை |
| 22.Lungi | - | மூட்டி |
| 23.Uniform | - | சீருடை |
| 24.Raincoat | - | மழைக்குப்பாயம் / மழையாடை |
| 25.Sweater | - | குளிருடை |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2052 – புரட்டாசி
அக்டோபர்த் திங்கள் 2021

ஆசிரியர் : முனைவர் **கோ.விசயராகவன்**
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


**உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித்துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன.**

# இன்றைய கலைச் சொல்லாக்கம் நாளைய மொழிவளம்

எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்ற கருத்திற்கு ஏற்ப ஒவ்வொரு சொல்லும் ஓர் பொருளைக் குறித்தே உருவாகிறது. ஒரு மொழியிலுள்ள ஒரு சொல்லுக்கு ஏற்ற சொற்செறிவும் கருத்தாழமும் மிக்க எளிமையான சொல்லைக் கலைச்சொல் என்கிறோம். ஒரு மொழியில் இல்லாத வேற்று மொழியினின்று நேரிடையாகச் சொற்களைப் பெற்றோ ஒலிபெயர்த்தோ அல்லது மொழிபெயர்த்தோ புதுச்சொற்களை ஆக்கிக்கொள்வதைக் கலைச்சொல்லாக்கம் என்பர். புதிய கருத்துகளை விளக்க கலைச்சொற்கள் குறுகியவையாகவும், இலக்கண விதிகளுக்கு ஈடுகொடுப்பனவாகவும் இருக்க வேண்டும். ஒரு புதிய கண்டுபிடிப்பின் விளைவாகத்தான் சொற்களின் இன்றியமையாமையும் தேவையும் உருவாகிறது.

தொழில்வளம், பொருள்வளம், அறிவுவளம் நிறைந்த ஜப்பான், சீனா போன்ற நாடுகளில் உலகில் எந்நாட்டிலும் எம்மொழியிலும் நூல்கள் வெளிவந்தாலும் உடனே தத்தம் தாய்மொழிகளில் மொழிபெயர்க்கப்படுகின்றன. இதனால், பிறநாட்டு மக்களின் கண்ணோட்டமும் கருத்துகளும் உடனுக்குடன் உலகெங்கும் பரவுகின்றன. இதன் மூலம் அந்நாடுகளில் அவரவர் தாய்மொழிகளில் மொழிபெயர்க்க ஏதுவாக கலைச்சொற்கள் செழித்துள்ளமை இங்குப் புலனாகிறது.

அவர்கள் கண்டுபிடித்த பொருள்களுக்கு அவர்கள் மொழியில் பெயர்களை உருவாக்கினர். கண்டுபிடித்தவர்களே பொருட்களுக்குப் பெயர் வைத்ததும் கலைச்சொற்கள் தோன்றுவதற்குரிய மூலக் காரணமாய் அமைந்தது. அதிகாரம் படைத்த நாடுகள் பிற நாடுகளுக்குள் மொழி மற்றும் நாகரிகப் பரிமாற்றத்தையும் ஏற்படுத்தின. இந்நிலையில், புதிய சொற்கள் நாள்தோறும் உருவாகி வருகின்றன.

ஒவ்வொருவரும் அவரவர்க்குரிய தனித்த மொழி வரையறையுடன் வாழ்ந்து வருகின்றோம். இத்தகைய கலைச்சொல்லாக்கமே நாளைய மொழிவளத்தின் சான்றாகும்.

## கலைச்சொல்லாக்கத்தின் தேவையும் அதைச் சார்ந்து மொழி பெறும் வளமும்

நம் நாட்டில் கண்டுபிடித்த சொற்களை நம் மொழிவரையறைக்கு ஏற்ப உருவாக்குகின்றோம். ஆனால், வேற்றுநாட்டினரின் சொல் வடிவம், ஒலி வடிவம் மாறுபட அதை நாம் ஏற்றுக்கொள்ளும் சூழ்நிலையும் உருவாகிறது. நுட்பச்சொல், சிறப்புச் சொல், துறைச்சொல், கண்டுபிடிப்புச் சொல் என்று பல்வேறு நிலையில் கலைச்சொற்கள் உருவாகின்றன எனத் திறனாய்வாளர்கள் கூறுகின்றனர்.

கண்டுபிடிப்புகளைக் கண்டுபிடித்த நாட்டவரே அவற்றிற்குப் பெயர் வைக்கின்றனர். எடுத்துக்காட்டாக, சீனாவின் வுகான் (WUHAN) நகரத்தில் கடந்த ஆண்டு பரவிய கொரோனா தீநுண்மி தற்போது உலகம் முழுவதும் மிகப்பெரிய அச்சுறுத்தலாக விளங்கி வருகிறது. இந்நிலையில், கொரோனா தீநுண்மிக்கு "கோவிட் 19" எனப் புதிய பெயரை ஜெனிவாவில் உள்ள சுகாதார அமைப்பு கொரோனா (Corona) தீநுண்மி (Virus) பரவிய ஆண்டான 2019 ஆகியவற்றை இணைத்து வைத்தது.

கொரோனா தீநுண்மி என்ற பெயர் இலத்தீன் மொழியில் Corona, கிரேக்க மொழியில் கொரீனா (மாலை, மாலையாக) என்பதில் உருவானது. அதாவது கிரீடம் அல்லது ஒளிவட்டம் என்பதே பொருள். இது மின்னணு நுண்ணோக்கி (Electron Microscope) மூலம் ஆராயும்போது தீநுண்மிகளின் தொற்று வடிவம் ஒரு கிரீடத்தை நினைவூட்டுகிறது.

இவ்விதம் தனி மனிதன் ஒன்றைக் கண்டுபிடித்தாலும் அது அனைவருக்குமான பொதுத்தேவையாகவே மாறுகிறது. பொருளின் தேவை ஏற்பட, கண்டுபிடிப்பை அறிய கண்டுபிடித்தவற்றை நுகர்வதற்கு , நுகர்வாளராய் நாம் நிற்கின்றோம். அப்பொருளுக்கு முதற்கண் என்ன பெயர் வைக்கப்பட்டதோ அப்பெயரையே நாமும் குறிப்பிடுகின்றோம். இல்லையெனில், புதிய மொழிக்கேற்பப் புதிய சொல்லை நாம் உருவாக்கி அழைக்கிறோம். கொரோனா> தீநுண்மி இவ்விதமே ஒரு புதிய சொல் சமூகத்தில் தோற்றம் பெறுகிறது.

எனவே, கலைச்சொல் எனும்போது வேற்றுநாட்டில் கண்டுபிடித்த சொற்களை நம் மொழியில் பயன்படுத்தும்போது, வேற்றுநாட்டில் கண்டுபிடித்த பொருள்களுக்குரிய சொற்களை மாற்றி நம் மொழியில் புதிய பெயர் வைத்திடினும் அது கலைச்சொல் ஆகும். தமிழ் மொழியில் வழங்கப்பட்ட சொல்லாயினும் புதிய வேற்றுப் பொருளுக்கு அச்சொல்லை நாம்

பயன்படுத்துவோம் எனில் அதுவும் கலைச்சொல்லாகவே அமைய முடியும்.

மனிதன் தான் கண்டுபிடித்த இயற்கை மற்றும் இயற்கைசார் புறப்பொருள்களுக்கும் தான் பயன்படுத்திய மொழியினில் சொற்களை உருவாக்குவது இயல்பு.

இச்சொற்கள் பிற நாட்டினரின் பிற மொழியினர் பயன்படுத்தும்போது அது பிற தேசத்து மக்களுக்கான கலைச்சொல்லாக உருவாகும். கலைச்சொற்கள் உருவாக்கம் ஐந்து நிலைகளில் தோன்றுகிறது.

1. ஒலி பெயர்ப்பு
2. எழுத்துப் பெயர்ப்பு
3. தமிழாக்கம்
4. கலப்புச்சொல்
5. கடன் மொழிபெயர்ப்பு மற்றும் புதுச்சொல் படைத்தல்

### ஒலி பெயர்ப்பு:

Pasparas பாஸ்பரஸ்

America அமெரிக்கா

### தமிழாக்கம்:

Acid அமிலம்

Shirt சட்டை

### கலப்புச்சொல்:

Ioinization அயனி ஆக்கம்

### கடன்மொழி பெயர்ப்பு:

Television தொலைக்காட்சி

### புதுச்சொல் படைத்தல்:

Bicycle ஈருருளி

அணு என்பது நுண்ணிய பொருள் என்று பண்டைய தமிழகத்தில் வழங்கப்பட்டு வந்தது. இன்று Nucleus என்ற உட்கருவை அணுக்கரு என்று அழைக்கிறோம். அன்றைய சொல்லாயினும் அன்றைய கருத்துக்கு மாறுபட்டு இப்போது புதிய கண்டுபிடிப்பான Nuclear ஐ அப்பெயரால் அழைப்பதால் அச்சொல் கலைச்சொல்லாகிறது. எந்த ஒரு கண்டுபிடிப்பாக இருந்தாலும் அவரவர் தாய்மொழியிலேயே பயன்படுத்துவது என்பது மொழிசார்ந்த உணர்வு. இன்று மீத்திறன் கணினிகளை (Super computers) அதிகமாகக் கொண்ட நாடு சீனா. அது அமெரிக்காவையே முந்தி விட்டது. அதற்கு அடிப்படைக் காரணம் சீனர்களின் மொழி உணர்வு.

எந்த ஒரு அறிவியல் துறையாக இருந்தாலும் அதனைத் தமிழில் புரிய வைக்க கலைச்சொல்லாக்கங்கள் அடிப்படையாக அமைகின்றன. எந்த மொழிச் சொல்லாக இருந்தாலும் அச்சொல்லின் மூலச்சொல் எது என்று அறிவதற்கே வேர்ச்சொல் ஆய்வு என்ற துறை உள்ளது. “மொழிஞாயிறு” தேவநேயப் பாவாணர் நூல்களை வாசித்தால் நமக்கு அது புரியும். தமிழ் காலத்துக்கு ஏற்பத் தன்னைத் தகவமைத்துக்கொள்ளும் மொழி.

மொழியின் எல்லையே சிந்தனையின் எல்லை. தமிழ் எல்லா அறிவியல் துறைகளிலும் பங்காற்ற வேண்டும். கலைச்சொல்லாக்கங்களை உருவாக்க வேண்டிய பெரிய பணி தமிழ்க்குமுகத்திற்குப் பெரிய அறைகூவலாக உள்ளது. தொழில் தொடர்பான சொற்களுக்கு ஏற்ற கலைச்சொற்களை உருவாக்கும்போது அத்தொழிலில் ஈடுபட்டு உள்ளோரிடம் இருந்து தொகுத்தல் சிறப்பு. எ.டு. Hammer என்னும் சொல்லிற்குத் தச்சரிடமிருந்து சுத்தியல் என்னும் சொல்லைப் பெறலாம்.

பொருத்தமான கலைச்சொற்கள் தமிழில் கிடைக்காதபோது நடைமுறைப் பயன் கருதி ஒலிபெயர்க்கலாம் அல்லது பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தலாம். இவ்விரண்டு நிலையிலும் அடைப்புக்குறிகளுக்குள் ஆங்கிலத்தில் இட வேண்டும். ஒவ்வொரு மொழியிலும் நன்கு தேர்ச்சியடைந்த பேரறிஞர்கள் மற்றும் சிறந்த மொழிபெயர்ப்பாளர்களைக் கொண்டு ஆயக்குழு நியமிக்கப்படவேண்டும். அவர்கள் கணினித் தொழில்நுட்பம் அறிந்தவராக இருந்து, பல்வேறு கலைச்சொற்களைச் சேகரித்து, புதிய புதிய கண்டுபிடிப்புகளுக்கு வேற்றுநாட்டார் உருவாக்கும் பெயர்ச்சொல்லிற்கு நம்மொழி சார்ந்த பெயர்ச்சொல்லை உடனடியாக மக்களிடம் வழங்குவதற்குரிய சூழலைக் கையாளுதல் வேண்டும். கணினித் தொழில்நுட்ப உதவியோடு புதிய கலைச்சொற்களைக் கையாள்வது மொழிவளர்ச்சிக்கு மேலும் வளம் சேர்க்கும்.

தமிழின் கலைச்சொல் வளத்தைப் பெருக்கும் நோக்கில் இவ்வியக்ககம் நடத்திய இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கத்தினைத் தொடங்கிவைத்துச் சிறப்பித்த சொல்லாக்க அறிஞர் திரு.ப.அருளி அவர்களுக்கும், பயிலரங்கில் பங்கேற்றுக் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரைவழங்கிய சொல்லாக்க அறிஞர்கள் முனைவர் ச.சச்சிதானந்தம் (பாரிசு), திரு.இரா.திருமாவளவன் (மலேசியா), திரு.இங்கர்சால் (நார்வே), முனைவர் கு.சிவமணி (புதுச்சேரி), முனைவர் கு.அரசேந்திரன் (சென்னை) ஆகியோருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரி விப்பதில் மகிழ்கிறேன்.

இந்த இதழில் கருத்துச் செறிவார்ந்த கட்டுரைகளை வழங்கியுள்ள முனைவர் கிரெகோரி ஜேம்சு, முனைவர் ச.சச்சிதானந்தம் (பாரிசு), திருமதி ச.ஞானா பியாற்றிசு (பாரிசு), முனைவர் கு.அரசேந்திரன், முனைவர் இ. இராவணன், திரு.நீச்சல்காரன், முனைவர் வே.அருட்பாமணி, முனைவர் து.பத்மபிரியா, முனைவர் ச.கண்ணதாசன், மாணவர் ம.இலக்கியவாணன் ஆகியோருக்கும் என் இனிய நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒன்றிணைந்து செயலாற்றுவோம். ■

# புலம்பெயர் நாடுகளில் தமிழ் அகராதியியல்: வேறுபட்ட பார்வை





**ச. ஞானா பியாற்றிஸ்**
நிர்வாக இயக்குநர்,
பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு


உலகில் புலம்பெயர்வு என்பது தவிர்க்க முடியாது நடந்து கொண்டிருக்கிறது. ஆதிகாலம் தொட்டே புலம்பெயர்வுகள் இடம்பெற்றுக் கொண்டிருக்கின்றன.

இதில் ஈழத்தமிழர்களின் புலப்பெயர்வு என்பது ஏறக்குறைய நான்கு தசாப்தங்களுக்கும் மேலாக நிகழ்ந்துகொண்டிருக்கின்றது. ஈழத்தில் இருந்து புலம் பெயர்ந்த தமிழர்கள் உலகமெங்கும் பரந்து வாழ்கின்றனர். அவர்கள் தாம் வாழ்கிற நாடுகளில் தங்கள் இனத்தின் அடையாளங்களான மொழியையும் பண்பாட்டையும் பேணும் ஆக்கங்களையும் இலக்கியங்களையும் படைத்து வருகின்றனர்.



அத்தோடு மட்டுமல்லாமல் அவற்றைத் தம் வருங்கால சந்ததியினருக்கும் முன்னெடுத்துச் செல்லும் பணியிலும் முனைப்புடன் செயற்பட்டு வருகின்றனர். அதற்காகத் தமது மொழியில் இலக்கிய இலக்கணம், அகராதிகள், இசை, நடனம், நாடகம், கவிதை போன்றவற்றைப் படைப்பதில் மும்முரமாக ஈடுபட்டு வருகின்றனர். அந்த வகையில் புலம்பெயர் நாடுகளில் ஈழத்தவர்களால் உருவாக்கப்பட்ட அகராதிகள் பற்றிய ஒரு வேறுபட்ட பார்வையை இக்கட்டுரை எடுத்தியம்புகிறது.

ஈழத்தமிழர் புலம்பெயர்ந்த ஐரோப்பிய நாடுகள் எனப் பார்க்கும் போது இங்கிலாந்து, பிரான்ஸ், ஜேர்மனி, சுவிற்சலாந்து, நோர்வே, டென்மார்க், சுவீடன், பின்லாந்து, நெதர்லாந்து, இத்தாலி போன்றவை முக்கிய நாடுகளாகப் பார்க்கப்படுகின்றன. இந்நாடுகளுக்கு ஆரம்ப காலங்களில் தொழில் தேடும் நோக்கிலும் பொருளாதார நிலையில் மேம்படவும் புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் பின்னர் இலங்கையின் உள்நாட்டுப் பிரச்சனை காரணமாகவும் பெருமளவில் புலம்பெயர்ந்தனர்.

இவ்வாறாகப் புலம்பெயர்ந்த ஈழத்தமிழர்களுக்கு அந்நாடுகளின் மொழிகளும் அந்நாடுகளில் நிலவிய குளிரும் பெரும் சிரமத்தைக் கொடுக்கும் விடயங்களாக இருந்தன. இச்சூழ்நிலையில் ஏற்கனவே இருந்த ஒருசில இருமொழி அகராதிகளும் கிடைப்பதற்கு அரிதானதாகவும், கடினமான சொற்பிரயோகங்களை உடையதாகவும், வடமொழிச் சொற்கள் அதிகம் காணப்படுவதாகவும் உள்ள நிலையில் இவ்வகராதிகள் புலம்பெயர்ந்த ஈழத்தமிழர்களுக்கு உடனடிப் பயனுடையவையாக இருக்கவில்லை.

அன்றாடப் பயன்பாட்டுச் சொற்களும் உணவு, மருத்துவம், நோய்கள் தொடர்பான சொற்களும் அவர்களுக்கு மிக அவசியமானதாகவும் உடனடித் தேவையாகவும் காணப்பட்டன. இவ்வாறான சூழ்நிலையில்தான் புலம்பெயர் நாடுகளில் தமிழ் இரு மொழி அகராதிகள் தோன்றலாயின.

### ஐரோப்பிய நாடுகளும் தமிழர்களின் தொகையும்

*பிரித்தானியா 1,56.000 – 2,00.000*

*பிரான்ஸ் 1,56,000*

*ஜேர்மனி 60,000*

*சுவிஸ் 50,000*

*இத்தாலி 25.000*

*நெதர்லாந்து 12.696*

*நோர்வே 13,000*

*டென்மார்க் 6,733*

*சுவீடன் 6,733*

ஆதாரம் விக்கிப்பீடியா

### ஐரோப்பாவில் தமிழ் இரு மொழி அகராதிகள்:

ஈழத்தமிழர்கள், தாம் புலம்பெயர்ந்து வாழும் நாட்டின் மொழியைக் கற்கவேண்டும் என்பதற்காக அந்நாட்டின் மொழியையும் தமிழ் மொழியையும் இணைத்து இருமொழி அகராதிகளை உருவாக்கியுள்ளனர். ஈழத்தமிழர்கள் ஐரோப்பிய நாடுகளுக்கு வருவதற்கு முன்னரே சில நாடுகளில் ஐரோப்பிய மொழியும், தமிழ் மொழியும் இணைந்த இருமொழி அகராதிகள் இந்திய அறிஞர்களால் தொகுக்கப்படிருந்தன.

இந்நாடுகளில் தமிழ்–தமிழ் ஒரு மொழி அகராதித் தொகுப்புகள் மேற்கொள்வதற்கான தேவையிருக்கவில்லை என்பதால் இருமொழி அல்லது பன்மொழி அகராதிகளை உருவாக்கினர். இருமொழி அகராதி எனப்படுவது தலைச் சொற்பகுதி ஒரு

## ஐரோப்பாவில் தொகுக்கப்பட்ட அகராதிகள்




இணையான பிறமொழிச் சொற்களை அறிந்து கொள்வதே இருமொழி அகராதிகளின் அடிப்படை நோக்கம் ஆகும். உலக மொழிகளில் முதலில் தோன்றிய தொல்லகராதிகள், முன்னகராதிகள் என்பவற்றிற்குமுன் இருமொழி அகராதிகள்தான் தொகுக்கப்பட்டன.

இருமொழி அகராதிகள், இரு மொழி சார்ந்த கலாசாரப் பண்பாட்டினை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன. ஒருமொழி அகராதிகள் இருமொழி அகராதிகளுக்கு உரிய சொற்களை வழங்கும் மூலமாகவும் இருமொழி அகராதிகள் ஒரு மொழி அகராதிகளுக்கு உரிய தொகுப்பு நெறிமுறைகளை வழங்கும் கையேடாகவும் விளங்கி வந்துள்ளன.

ஒரு மொழி அகராதிகளும் இரு மொழி அகராதிகளும் பல தனிப் பண்புகளையும் சிறப்புக் கூறுகளையும் பெற்று வந்துள்ளன. இவ்விரு துணைமரபுகளும் ஒரு காலக்கட்டத்திற்கு உரியவை எனினும் ஒன்றின் தாக்கம் மற்றொன்றில் இல்லாமல் தத்தமது மரபுகளைத் தக்கவைத்து வளர்ச்சி அடைந்துள்ளன.

இருமொழி அகராதிகள் மூலமொழியாளர் இலக்கு மொழியில் நூல்களைப் படைக்கவும், இலக்கு மொழியாளர் மூலமொழி நூல்களைப் படிக்கவும் தம்மொழியில் மொழிபெயர்ப்புகளைச் செய்யவும் பயன்படுகின்றன. தமிழில் இருமொழி அகராதிகள் தொடக்கக் காலத்தில் மேல் நாட்டினரால் படைக்கப்பட்டன.

அவர்களின் பெரும்பான்மையோர் சமயப் பணிகளுக்காக இந்தியாவிற்கும் இலங்கைக்கும் வந்த ஐரோப்பிய மதகுருமார் என்பதால் அவர்கள் தமிழ் மொழியைக் கற்பதற்காக அகராதிகளை உருவாக்கினர். ஆனால் இன்று மேல் நாட்டில் வாழும் தமிழர்கள் அந்நாட்டு மொழியைக் கற்பதற்காகவும், இங்குப் பிறந்து வளர்ந்த இளந்தலைமுறையினர் தமிழ்மொழியைக் கற்றுக்கொள்வதற்காகவும் இருமொழி அகராதிகளை உருவாக்குகின்றனர். இவ்வாறு உருவாக்கப்பட்ட அகராதிகளை நாடுவாரியாகக் கூறலாம்.

### பிரித்தானியா

பிரித்தானியாவில் இரு மொழி அகராதிகள் புலம்பெயர் தமிழர்களால் தொகுக்கப்படவில்லை. ஏனெனில் முன்னரே ஆங்கிலம்–தமிழ் அகராதிகள் அறுபத்திரண்டும் தமிழ்–ஆங்கில அகராதிகள் இருபத்தொன்றும் தொகுக்கப்பட்டிருந்ததனால் அவசியம் ஏற்படவில்லை.

### ஐரோப்பாவில் தொகுக்கப்பட்ட அகராதிகள்

பிரான்ஸ் நாட்டில் 1968ஆம் ஆண்டிலிருந்து புதுச்சேரித் தமிழர்கள் வாழ்ந்து வருகின்றனர். ஆனால் 1975ஆம் ஆண்டின் மத்தியில்தான் ஒருசில இலங்கைத் தமிழர் பிரான்ஸில் காலடி எடுத்து வைத்தனர். சில ஆண்டுகள் கழித்து 1980ஆம் ஆண்டளவில் நிறைய பேர் வந்தனர், பின்னர் 1983ஆம் ஆண்டிலும் அதன் பின்னரும் பெருமளவு இலங்கைத் தமிழர் பிரான்ஸ் வந்துசேர்ந்தனர். இப்போது அவர்களின் எண்ணிக்கை ஒரு இலட்சத்தையும் தாண்டிவிட்டது.

இலங்கைத் தமிழர் பிரான்ஸிற்கு வந்தபின்னர்தான் பிரெஞ்சு – தமிழ் அகராதி, தமிழ்வழி பிரெஞ்சு இலக்கண நூல்களின் தேவை ஏற்பட்டது. அத்தேவைகளை நிறைவேற்ற இலங்கைத் தமிழர்களே இவ்வகையான நூலாக்க முயிற்சிகளில் ஈடுபட்டனர்.

ஏற்கெனவே பிரெஞ்சு மிஷனரியினரால் இருவழி பிரெஞ்சு–தமிழ் அகராதிகள் 1911 ஆம் ஆண்டில் தொகுக்கப்பட்டிருந்தன. அவ்வகராதிகளின் சொற்களும் அவற்றிற்கான பொருள் விளக்கமும் கத்தோலிக்க மதச்சொற்களாகவே விரவிக் காணப் பட்டன. அவ்வகராதியின் பிரதிகளும் கிடைப்பதற்கு அரிதானவையாகவே இருந்தன.

### பிரான்ஸில் வெளியான இருமொழி அகராதிகள்:

- பிரெஞ்சு–தமிழ் அகராதி Dictionaire: francais - tamoul 1986 இல் பாரிஸ் நகரத்தில் உள்ள Ecole de Tamoul நிறுவனத்தினால் வெளியிடப்பட்டது. தமிழ் மொழியுடன் இணைந்த இரு மொழியகராதிகளில் பிரான்சில் வெளிவந்த முதல் அகராதி இதுவாகும். இதில் ஈழத்தமிழ் இந்தியத் தனித்தமிழ் எனச் சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வகராதி சதாசிவம் சச்சிதானந்தம் அவர்களால் தொகுக்கப்பட்டது.
- பிரெஞ்சு–தமிழ் அகராதி 1995 இல் சண்முகசுந்தரம் என்பவரால் வெளியிடப்பட்டது.
- பிரெஞ்சு –இலங்கைத்தமிழ் நடைமுறை அகரவரிசை Dictionnaire pratique: francais tamoul srilankais எனும் அகராதி 1997 இல் பாரிசில் L' Harmattan என்ற பிரெஞ்சுப் பதிப்பகத்தினால் வெளியிடப்பட்டது, இதனைத் தொகுத்தவர் சதாசிவம் சச்சிதானந்தம்.

• தே.பிரகலாதன், வசந்தி பிரகலாதன் எனுமிருவர் இணைந்து தமிழ்–பிரெஞ்சு இருவழி அகராதி பாரிஸ் நகரில் வெளியிட்டுள்ளனர்.

• Dictionnaire Moderne Francais-Tamoul தற்கால அகராதி என்ற பிரெஞ்சு–தமிழ் அகராதியை நாகராஜன் என்பவர் 2005இல் பாரிசில் வெளியிட்டுள்ளார்.

. பிரெஞ்சு–தமிழ் பொருள்வரிசை சொல்லகராதி Vocabulaire thematique francais-tamoul. தமிழ்– பிரெஞ்சு பொருள்வரிசை சொல்லகராதி Vocabulaire thematique tamoul - francais என்பன சதாசிவம் சச்சிதானந்தம் அவர்களால் தொகுக்கப்பட்டு, Lophrys எனும் பதிப்பகத்தினால் 2010 இல் பாரிஸ் நகரில் வெளியிடப்பட்டது.

• தமிழ்–ஆங்கிலம் – பிரெஞ்சு பொருள்வரிசை மும்மொழிச் சொல்லகராதி Vocabulaire thematique tamoul-anglais-francais சதாசிவம் சச்சிதானந்தம் அவர்களால் தொகுக்கப்பட்டு, Gnana எனும் பதிப்பகத்தினால் 2010 இல் பாரிஸ் நகரில் வெளியிடப்பட்டது.

ஐரோப்பாவில் வெளியான இருமொழி அகராதிகள்




பிரான்சில் வெளியான பிரெஞ்சு –தமிழ் அகராதிகளை ச. சச்சிதானந்தம், ப.சண்முகசுந்திரம், இணையர் பிரகலாதன் வசந்தி, எச்.நாகராஜன் ஆகியோர் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். இவர்களில் சச்சிதானந்தம், பிரகலாதன் வசந்தி ஆகியோர் இலங்கையர்கள். மற்ற இரு தொகுப்பாளர்களும் புதுச்சேரிக்காரர்கள். இந்நால்வரும் சில பிரெஞ்சுச் சொற்களுக்குப் பொருள் விளக்கம் கொடுக்கும் போது அவர்களின் அறிவுக்கேற்பவே சொற்களைக் கையாண்டிருக்கிறார்கள்.

எடுத்துக்காட்டாக pain, Sucre, parler, என்ற சொற்களை எடுத்துக்கொள்வோம்.

Pain என்ற பெயர்ச்சொல்லுக்குச் சண்முகசுந்தரமும், நாகராஜனும் ரொட்டி எனவும், பிரகலாதன் இணையர் பாண் எனவும் பொருள்தர, சச்சிதானந்தம் திரளப்பம், பாண ரொட்டி என மூன்று சொற்களைக் கொடுத்திருக்கின்றார். இந்தியாவில் பொதுவாக வழங்கப்படுகின்ற ரொட்டியும், இலங்கையில் வழங்கப்படுகின்ற ரொட்டியும் ஒரே பொருளைக் குறித்து நிற்கவில்லை. அச்சொல் இருநாடுகளிலும் வெவ்வேறு

| பிரான்சில் வெளியான அகராதிகள் | Pain | Parler | Sucre |
|---|---|---|---|
| அகரமுதலி: பிரெஞ்சு - தமிழ் ச.சச்சிதானந்தம் | *nm* திரளப்பம் (பாண், ரொட்டி) | *vi* கதை, பேசு | *nm* சர்க்கரை (சீனி), சர்க்கரை (சீனி)க்கட்டி |
| கையகராதி பிரஞ்சு-தமிழ், தமிழ்-பிரஞ்சு ப.சண்முகசுந்திரம் | *n.m* ரொட்டி | *v.t.* பேசு | *n.m.* சர்க்கரை |
| அகராதி பிரஞ்சு - தமிழ், தமிழ் - பிரஞ்சு பி.வசந்தி, தே.பிரகலாதன் | *n.m.* பாண் | *v.intr* கதைத்தல், பேசுதல் | *n.m.* சீனி |
| தற்கால பிரெஞ்சு மொழி அகராதி பிரெஞ்சு - தமிழ் எச்.நாகராஜன் | *nf* ரொட்டி | பேசு | *n.m.* சர்க்கரை |




## ஜேர்மனி

ஜேர்மன் நாட்டில் தோன்றிய தமிழ் அகராதியினைக் கூறலாம். ஜேர்மனியில் தமிழ் அகராதிகள் சில தோன்றியுள்ளன. பிற ஐரோப்பிய நாடுகளைவிட இங்குத் தமிழ்–ஜெர்மன் அகராதிப் பணிகள் நீண்டகாலமாக நடைபெற்று வருகின்றன. அதற்குக் கொலன் (Cologne) பல்கலைக்கழகமும், இந்தியவியல் (Indology) மற்றும் தமிழியல் (Tamil studies) துறைகள் தூண்டுகோலாகவுள்ளன.

Sprachfuhrer Und Worterbuch deutsch - tamil ஜெர்மன்–தமிழ் அகராதியும் மொழி வழிகாட்டியும் 1988ஆம் ஆண்டு பெர்ண் மாநகராட்சியின் Citer wohl-fahrt Bundesverband எனும் தொழிலாளர் நலன்புரிச் சங்கத்தினரால் வெளியிடப்பட்டது.

Etal S Worterbuch Tamilisch Tamilisch - Englisch - Deutsch, Deutsch - English - Tamilsch தமிழ் – ஆங்கிலம் – ஜெர்மன், ஜெர்மன் –ஆங்கிலம்– தமிழ் அகராதி ஒன்று 1989 ஆம் ஆண்டு பெர்ண் மாநகரில் மார்ட்டின் ஹென்சிங் என்பவரால் தொகுக்கப் பட்டது.

Deutsch - Tamil - Worterbuch ஜெர்மன்–தமிழ் அகராதி கனகசபாபதி சரவணபவன் அவர்களால் 1992இல் சென்னையிலும் Tamil - Tamil - Deutsch - Worterbuch தமிழ்–தமிழ்–ஜெர்மன் அகராதி 1994இல் திருகோணமலையிலும் வெளியிடப்பட்டது.

தொடர்ந்து 2006 இல் கனகசபாபதி சரவணபவன் அவர்கள் 302 பக்கங்களுடைய ஜெர்மன்–தமிழ், தமிழ்–ஜெர்மன் எனும் இருவழிப் பேரகராதி ஒன்றை அவருடைய திருகோணமலை வெளியீட்டகத்தின்வழி வெளியிட்டுள்ளார்.

கொலன் பல்கலைக்கழகமும் கலிபோர்னியா பெர்க்குலி பல்கலைக்கழகமும் இணைந்து சிறந்த தமிழ் அகராதிகளைக் குறிப்பாகச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதியை இணையவழியாகப் பயன்படுத்துவதற்கு ஏற்ற இணையவழி அகராதியை உருவாக்கியுள்ளன.

http://www.uni-koeln.de/phil- fakhindologie /tamil/Ot/search.htm எனும் இணையதள முகவரியில் இதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

சில நிகண்டுகளையும் பழைய அகராதிகளையும் திரட்டி Cumulative Tamil Dictionary (CTD ) எனும் பெயரில் இணையவழி அகராதித் தொகுப்பு ஒன்று வெளியிடப்பட்டுள்ளது இவ்வகராதித் திரட்டில் திவாகரம், சூடாமணி நிகண்டு, அகராதி நிகண்டு, உரிச்சொல் நிகண்டு ஆகிய நிகண்டுகளையும் பெப்சிநஸ்லிவிஸ்பால்டிங் ஆகிய ஐரோப்பியர்களின் அகராதிகளையும் காணமுடியும். (www.gh.com/online/taol.htm)

ஹேர்ஸ்ட்சிவயா, கே.முருகானந்தம் என்பவருடன் இணைந்து fur Globetrotter என்னும் தமிழர், ஜேர்மன்–தமிழ் அகராதியை Biefeild எனும் இடத்தில் 1988இல் தொகுத்து அளித்தார்.

தாமஸ் மால்டன் Sascha Ebeling ஆகியோர் இணைந்து Emden worterbuch Deutsch - Tamil எம்டன் ஜேர்மன்–தமிழ் அகராதியைத் தொகுத்தளித்தனர். இவ்வகராதியும் சரவணபவனின் அகராதியும் Langenscheidts Universal Worterbuch அகராதியின் தலைச்சொற்களை அடிப்படையாகக்கொண்டு உருவாக்கப்பட்டன. கோலன் நிறுவன இயக்குநர் யாழ்ப்பாணத்து விடுகதைகளைத் தொகுத்து Ratsel aus Mundicher Ueber lieferung யாழ்ப்பாணத்து விடுகதைகள் எனும் நூலை 1998இல் வெளியிட்டார்.

## நோர்வே நாட்டில் அகராதிப்பணி

நோர்வே நாட்டில் அண்மைக்காலம் வரை மூன்று தமிழ் இருமொழி அகராதிகள் வெளிவந்துள்ளன. நோர்வேயில் வெளியான முதல் தமிழ் அகராதியாக நோர்ஸ்க்-தமிழ் அகராதியைக் கூறலாம்.

Norsk -Tamilsk Ordiste (அகராதி) இதனை

உருவாக்கிய சபாரத்தினம் அவர்கள் மைத்ரேயி எனும் பெயரில் 1989இல் இதனை வெளியிட்டிருந்தார்.

இரண்டாவது அகராதியாக, புதிதாக நோர்வே வருகிற தமிழர்களுக்காக வெளியான நோர்ஸ்க் – தமிழ் அகராதி Ordiste Tilnyi Norge: Norsk –Tamilsk Gerd Manne இவ்வகராதியைத் தொகுத்தவர் வேலாயுதம்பிள்ளை தயாளன் ஆவார். இவ்வகராதி 1991இல் ஒஸ்லோவில் வெளியிடப் பட்டது

2011இல் இருபத்து மூன்று வயது ஆர்.எம். ராஜ் என்னும் இளைஞரால் நோர்ஸ்க்–தமிழ்ச் சட்டவியல் அகராதி Norsk–Tamilsk Juridish Ordbox வெளியிடப் பட்டது. ஆர்.எம்.ராஜ் தமிழ்–சிங்களம்–நோர்ஸ்க் மொழிபெயர்ப்பாளராவார்.

## சுவீடன் நாட்டில் அகராதித் தொகுப்பு

சுவீடன் நாட்டில் தமிழ் அகராதி Ordbox Tamil Svenska உப்சாலா பல்கலைக்கழகத்து ஆப்பிரிக்க ஆசிய மொழிக்கல்வி நிறுவனத்துப் பேராசிரியை Ulla Sand gren என்பவரால் உருவாக்கப்பட்டது. இதனை 1992இல் உப்சாலாவில் வெளியிட்டுள்ளனர்.

## பின்லாந்து தமிழ் அகராதி

பின்லாந்தில் ஒரு தமிழ் அகராதி Hyttinen என்பவரால் தொகுக்கப்பட்டுச் சுகாதார நலன்புரிச் சேவை யினரால் ஹெல்சிங்கியில் 1991இல் வெளியிடப்பட்டது. Etal's Yleisavain: U Ikonmmaalaisen Ensisanato - Suomi - tamil Rxkp

## டென்மார்க் நாட்டில் தமிழ் அகராதிகள்

டென்மார்க் நாட்டில் அகராதித் தொகுப்பு எனப் பார்க்கும் போது இருவழிச் சிறு அகராதி Etal' Dansk–Tamilsk, Tamilsk –Dansk mini Ordbog. Lone Fog என்ப வரால் ஹோர்னிங்கில் 1987 இல் வெளியிடப்பட்டுள்ளது.

டேனிஸ்–தமிழ் அகராதி முதலுதவி தொடர் பான சொற்கள் பொருட்புல வரிசையில் ஒழுங்கு படுத்தப்பட்டமுறையில் Henrik Knusen என்பவரால் உருவாக்கப்பட்டு Middelfart இல் 1987இல் வெளியிடப் பட்டுள்ளது.

அடுத்து Dansk–Tamil Ordbog டேனிஸ்–தமிழ் தொழில்நுட்ப அகராதி கே.பி. சிறினவாசன் என்பவரால் உருவாக்கப்பட்டு Engesvang என்ற இடத்தில் 1987இல் வெளியிடப்பட்டது.

Dansk - Tamilsk Ordbog டேனிஸ்–தமிழ் அகராதி அண்ணாமலை பாலமனோகரன் (நிலக்கிளி பாலமனோகரன்) அவர்களால் தொகுக்கப்பட்டு Viborg இல் 1993ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

## சுவிற்சர்லாந்து

சுவிற்சர்லாந்தில் Deutsch Grammatik Fur Tamilisch Sprechende தமிழ் பேசுவோருக்கான ஜேர்மன் இலக்கணம் எனும் நூலில் Deutsch - Tamilish ஜேர்மன்–தமிழ் சொற்பட்டியல் காணப்படுகின்றது. 1999ஆம் ஆண்டு சூரிச் மாநகரில் மதி கணபதிப்பிள்ளை என்பவரால் இது தொகுக்கப்பட்டது.

## நெதர்லாந்து (ஹாலந்து)

நெதர்லாந்தில் Tamil - Dutch Dictionary தமிழ்–டச்சு அகராதி றோபேர்ட் மத்தியூஸ் என்பவரால் தொகுக்கப்பட்டிருக்கிறது. பின்னர் 1997இல், Vertaalwoordenboek: Nederlands - Tamil, Tamil Nederlands டச்சு –தமிழ், தமிழ்–டச்சு எனும் இருமொழி இருவழி அகராதியினைக் கனகசபாபதி சரவணபவன் திருகோணமலை வெளியீட்டாளர் எனும் பதிவில் வெளியிட்டிருக்கின்றார். இவர் முன்னர் ஜேர்மன்–தமிழ், தமிழ்–ஜேர்மன் அகராதிகளைத் தொகுத்து வெளி யிட்டிருக்கிறார்.

## இத்தாலி

இத்தாலியம் – தமிழ் Primo dizionario italiano-tamil அகராதி இளையதம்பி Renoto Cucchiani ஆகியோர் இணைந்து 1993 இல் பெல்லின்சோனாவில் வெளியிடப்பட்டது.

## ஐரோப்பிய மொழிகளில் அம்மா

| | |
|---|---|
| ஆங்கிலம் | – mummy,mamma |
| பிரெஞ்சு | – maman |
| ஜேர்மன் | – Mama |
| இத்தாலியம் | – mamma |
| டச்சு | – Mama |
| நோர்வேஜியம் | – mamma |
| டேனிஷியம் | – mor |
| சுவீடியம் | – mamma |

## இந்தியா தமிழ்நாடு

ஈழத்தில் 1876இல் வல்வை வயித்திலிங்கப் புலவரால் இயற்றப்பட்ட சிந்தாமணி நிகண்டு எனும் நூல் விருபா குமரேசன் எனும் ஈழத்தவரால் மின் அகராதியாக்கப்பட்டுள்ளது.

தமிழர்களின் தொன்மையான அகராதி வடிவமான நிகண்டு ஒன்றினை மின் அகராதியாக்கும் நிகழ்வு முதன்முதலாக இவரால் செய்யப்பட்டுள் ளது.

http://www.viruba.com/Nigandu/Chintamani_Nigandu.aspx என்ற இணையதள முகவரியில் இதனை இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

சிந்தாமணி நிகண்டு தொடர்பான பல தகவல்கள் http://www.viruba.com/Nigandu/CN_Stats.aspx என்ற இணைய முகவரியில் இணைக்கப்பட்டுள்ளது. மறைமலையடிகளாரின் மகளான திருவாட்டி திருவரங்கம்பிள்ளை நீலாம்பிகையம்மையாரால் 1938ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட வடசொல் அகரவரிசைச் சுருக்கம் எனும் அகராதியையும் http://www.viruba.com/Dictionaries/Vatasol_Tamil_Akaravarisaich_Surukkam.aspx எனும் இணைய முகவரியில் மின்அகராதியாக மாற்றி இணைத்துள்ளார்.

இவ்வாறாக ஐரோப்பிய, இந்திய புலம்பெயர் நாடுகளில் பல அகராதித் தொகுப்புக்கள் கடந்த முப்பது, நாற்பது ஆண்டுகளில் வெளிவந்துள்ளன.

# THINGS AS CERTAIN AS DICTIONARIES AND TAXES, CAN BE MORE FIRMLY BELIEV'D
## (WITH APOLOGIES TO DANIEL DEFOE)



Gregory James

In 2006, the Government of Tamil Nadu decided to exempt from entertainment tax films with a Tamil title, and in 2011, imposed certain other conditions for the grant of the exemption. Chennai-based Red Giant Movies (RGM) produced a Tamil-language film entitled கெத்து @kettu, which was released in 2016, to mixed reviews (Avinash, 2016; Sajid, 2016; Saraswathi, 2016; Srinivasan, 2016). As soon as the film had been issued a certificate by the Central Board of Film Certification [CBFC),RGM applied for the tax exemption. However, the six-memberViewing Committee constituted by the Stateto assess whether applicant films warranted exemption,unanimouslyrejected RGM' sapplication, despite all the other required conditions being met, on the ground that கெத்து romanised as gethu-is not a Tamil word. RGM filed an appeal petition, and the issue came before the Madras High Court, in Red Giant Movies v. The State of Tamil Nadu and others [2016].

According to the State, while gethu does not feature in the major Tamil dictionaries, including the TAMIL LEXICON, published by the University of Madras, and the CED, published under the auspices of the Government of Tamil Nadu, the form kethu does, and is a Tamil word. (In fact, the transliteration in both dictionaries is kettu.) The State's counsel, and erstwhile Advocate General, the "genial" (Subramani, 26.8.2016) A. L. Somayaji,submitted that even as per dictionaries the word "Gethu" is not a Tamil word and only the word "Kethu" is a Tamil word' -effectively arguing that gethu and kethu are two different words, even though. they are both transliterations of கெத்து(Staff reporter, 2.2.2016). Further, in response to a defence request for elucidation, the head of the Directorate of Tamil Development stated that gethu is not found in Sangam or other ancient Tamil literary works. RGM countered:

கெத்து is purely a Tamil word as per Tamil Dictionary, therefore, the rejection on the ground that the word கெத்து is not the Tamil word is mis-found [and] besides run(s) against the very tenor and vigor of Government Orders passed for empowering exemption from the entertainment tax, if the title of the movie is in Tamil language.

We can see that the State's focus was on the romanisation, RGM's on the Tamil-script form. Thus the dispute for resolution before the court centred on whether கெத்து, romanised as gethu, is or is not a "Tamil word".

RGM showed that கெத்து features in a number of Tamil dictionaries, notably the TAMIL LEXICON, and the CED, where citation evidence is given from திருப்புகழ் Thiruppukal, a fifteenth-century anthology of religious songs, and a landmark of medieval literature, by the poet-saint அருணகிரிநாதர் aruṇakirinātar. The judge, M. Duraiswamy, a justice of the High Court of Madras since 2011, observed,

When …கெத்து has been included in the Tamil dictionaries, I am not in a position to understand how the 6 members Viewing Committee unanimously came to the conclusion that the word கெத்து is not a Tamil word. … Without any basis, the committee has come to a conclusion that the word கெத்து is not a Tamil word in spite of the fact that … கெத்து finds a place even in the dictionary, published by the Government.

He rejected the Directorate of Tamil Development's statement "for the reason that they have not even perused the dictionaries … produced before this court, including the dictionary published by the Government".

RGM's counsel had emphasised that the phonetic appropriateness of the romanisation was not the subject matter of the petition, but exclusively whether the film title was a Tamil word or not (Naig &Sureshkumar, 2016). In finding in favour of RGM, and basing his decision on the content of three documents placed before the court - RGM's application for the tax exemption, the covering letter accompanying the application, and the CBFC cetificate the judge largely sidestepped the politically fraught linguistic controversy, and focused objectively on the procedural aspect of the issue. He deemed that the determining text was RGM's application documentation, in which the film's title had been given as கெத்து a word clearly lemmatised in the major Tamil dictionaries. Any romanisations which happened to feature elsewhere were, he ruled, immaterial:

The respondents should have considered the title of the movie as written in the application … and granted exemption of entertainment tax to the petitioner. When the title of the movie has been mentioned rightly as கெத்து which finds place in Tamil dictionaries, the mentioning of the title of the movie as "Gethu" in the covering letter and in the Censor Board certificate has no relevance for the grant of exemption of the entertainment tax.

"It is pertinent to note," he added, "that the Tamil word கெத்து has been written in English as "Gethu" and not the English word "Gethu" as கெத்து in Tamil."

The case provoked a good deal of public comment - much, it must be said, at best misleading, at worst ill-informed - in the press and social media:

Holding that "Gethu" is a Tamil word, the Madras high court … directed the State government to grant exemption

from entertainment tax for Tamil movie “Gethu" (Stalin, 2016)

Riding on overwhelming etymological evidence submitted before him, Justice M Duraiswamy held that the term 'Gethu' was indeed a Tamil word, and hence the film was eligible for tax exemption. ...

(Subramani, 6.2.2016)

Even in the dictionary viz 'Comprehensive Etymological Dictionary of the Tamil Language,' published by the Directorate of Tamil Etymological Dictionary Project, the word "Gethu" finds a place, the Judge pointed out. (Siva Sekaran, 6.2.2016)

The Government had contended that according to Tamil grammar, there is only one letter in Tamil with the phonetic expression “ka”. No letter with phonetic expression 'ga' is used in Tamil to begin a word. Therefore, any word starting with phonetic expression 'ga' or 'ge' cannot be a Tamil word. (Staff reporter, 6.2.2016)

In this last extract, by “phonetic expression”, was presumably meant romanisation. But (and as is implicit in Duraiswamy's judgment), a romanisation, or indeed any other transliteration, does not invalidate an etymology. The Tamil script system is largely phonemic, and so affords an economy of characters: represents a voiceless unaspirated velar stop, which occurs initially, as well as its intervocalic allophone, a lightly voiced velar stop or fricative. Since, for Tamil, 'scholars and others have not been able or willing to agree on a standard transliteration' (Schiffman, 1999, p. 13), there exists a variety of romanisations, from the broad phonemic (k in all positions) as adopted by the TAMIL LEXICON and the CED, to the narrower 'alphabeto-phonetic' (k or g initially, k, kh or g intervocalically). Tamil place names, for example, traditionally spelled in Latin script with an initial G - such as Gobichettipalayam in Erode District, Goundampalayam in Coimbatore District or Gudiyatham in Vellore District - are not any less Tamil by virtue of their being romanised.

A further aspect, not tåken up in the judgment, lies in the semantic range of *கெத்து* Siva Sekaran (23.1.2016) noted that counsel for RGM, the seasoned advocate Puspanathan Wilson, 'referr(ed) to epics and ancient Tamil literature to trace the origin of the word. He cited Arunagirinathar's Thiruppugazh *திருப்புகழ்* to argue that the word means “proud". This is, indeed, the sense noted in the CRE-A: dictionary (2008), which is informed by contemporary corpus evidence, where *கெத்து* is recorded as occurring as an adjectival as well as a nominal (cf. the use in an English text in Hebbar N. [2018, 135]: 'Having a daughter who is IAS is a matter of geththu (grand status) for the parent"s.):

*கெத்து பெ. (பே.வ) தன்னுடைய உயர்வையும். பெருமையையும் காட்டிக்கொள்ளும்போக்கு* ['a tendency to pride and self-glorification']; being haughty; proud bearing. *புதிய அதிகாரி அல்லவா அதனால் கெத்தாக இருக்கிறார்* ['No longer a novice official, he's become quite uppity').

OXFORD (2009) repeats part of this entry almost verbatim, with the same illustrative example:

*கெத்து: தன்னுடைய உயர்வையும்.பெருமையையும் காட்டிக் கொள்ளும்போக்கு: புதிய அதிகாரி அல்லவா அதனால் கெத்தாக இருக்கிறார்.*

Similarly NARMADHA (2010), omitting the illustrative citation:

*கெத்து: தன்னுடைய உயர்வையும்.பெருமையையும் காட்டிக் கொள்ளும்போக்கு*: being haughty

Cf. Venkateswaran (2019):'pride, show off, arrogance. The meaning is more towards arrogance though the other two meanings are also not inapplicable.' Thus, in the slogan *நம்ம ஊரு நம்ம கெத்து* namma ūru namma kettu ('Our city, our pride'), for example, the meaning is wholly positive.

Other dictionaries, including modern online glossaries cite alternative meanings, e.g.

Winslow (1862) *கெத்து:*, . (Hind.)Wiles, tricks, *தந்து:*. 2. Evasion, shift, equivocation, *உபாயம்.:*

TAMIL LEXICON (1927) *கெத்து:* kettu, n. < id. cf. Mhr. gataka. (T.gattu.) 1. Wiles, tricks; *தந்திரம் பொருளைக் கேத்திற் பற்றி (திருப்பு:* 1074). 2. Evasion, equivocation; *தந்திரமான வார்த்தை* (W.)

CED (2002) *கெத்து:* kettu, *பெ* (n.)1.*சூழ்ச்சி (தந்திரம்):* wiles,tricks. *பொருளைக்கெத்திற்பற்றி (திருப்பு.* 1074). 2. *தந்திரமானபேச்சு* evasion, equivocation.

*தெ.கத்து* Mar. gataka.

(The citation from *3 திருப்புகழ்* is given at the definition wiles, tricks', as a synonym of *தந்திரம்* tantiram ‘guile, cunning' or *சூழ்ச்சி* cūlcci'plot, scheme, intrigue', not 'proud'.)

SURA (2012) *கெத்து பெ தந்திரம்* trick; cunning.

GLOSBE online *கெத்து* equivocation

evasion

tricks

wiles

TAMILCUBE online *கெத்து*[kettu), wiles, tricks, evasion, shift, *உபாயம்.*

The entry at Google's online TamilWIKTIONARY (*தமிழ்விக்சனரி)* is not the lexical item, but the film title, redirected from Tamil Wikipedia (*தமிழ்விகிபீடியா)* where its official translation is given asGrit: cf. the headline of Sajid's (2016) review: 'Gethu loses its grit due to improper casting and lack lustre (sic) treatment to the screenplay!!!'This reflects the colloquial use of *கெத்து* to mean 'determination', 'courage':

*மோடிக்கு உண்மையிலேயே “கெத்து” இருந்தால்.* motikku unmaiyile kettu iruntil('If Modi really had "guts” ...)

## மகன் › மான் › மன் = Man (பாவாணர்)

*மகன் என்னும் தமிழ்ச்சொல், கோதிய (Gothic) மொழியில் மகுஸ் (magus) என்றும் கேலிய (Gaelic) மொழியில் மக் (mac)என்றும், திரித்து வழங்கி, பின்னர் Man என்னும் ஆங்கிலச் சொல்லாக வழங்கிவருவதைப் பாவாணர் ஆய்ந்துள்ளார்.( மகன் ›மான் › மன் = மாந்தன்)*

*Man என்னும் ஆங்கிலச் சொல்லையும் மநு என்னும் சமற்கிருதச் சொல்லையும் முறையே' mind, மநஸ் என்னும் சொற்களோடு தொடர்புபடுத்தி thinking animal, thinking creature என்று மேலை மொழி நூல் அறிஞர்கள் பலர் பொருள் கூறுவர். இது தவறு என்று பாவாணர் ஆய்ந்துள்ளார் மாந்தனைக் குறிக்கும் man என்னுஞ் சொல் மகன் என்பதன் திரிபென்றும், மனத்தைக் குறிக்கும் mind என்னுஞ் சொல், முன் என்னும் தென்சொல் வேரின் திரிசொல்லென்றும், வேறுபாடறிந்து ஆய்ந்துள்ளார்.( man சொல் பற்றி பாவாணரின் தலைமைத் தமிழ் நூலில் கண்டு தெளியலாம்). மன் எனும் தமிழ்ச்சொல் மாந்தனைக் குறித்தது. நீண்ட காலத்திற்குப் பின்பு ஆங்கிலத்தில் man என வழங்கி வருகின்றது, என்னும் பாவாணரின் ஆய்வை அடிப்படையாகக் கொண்டு எவ்வாறு Game என்ற சொல் தமிழிலிருந்து பிறந்தது என்பதைச் சுருக்கமாகக் காண்போம்.*




## man என்னும் சொல்லுக்கு மேலை மொழி நூல் தரும் விளக்கம் :

Game என்னும் சொல்லின் இரண்டாம் பகுதியில் இருக்கும் man என்பது மனிதனைக் குறிப்பதாகும். இந்த manசொல்லுக்கு "man" என்னும் தொல் இந்தோ– ஐரோப்பிய வேர் மூலமாகும்.தொல் இந்தோ– ஐரோப்பிய "man" என்னும் வேருக்கு மனிதன் என்பது பொருள்.

## man என்னும் சொல்லுக்கு ★men ("to think" ) மூலமா?

*சிந்தித்தல் மற்றும் எண்ணுதல் பொருள் கொண்ட தொல் இந்தோ ஐரோப்பிய வேரான men என்பதையும் மனிதனைக் குறிக்கும் man சொல்லிற்கு மூலம் எனப் பெரும்பாலான மேலை மொழி நூல் அகராதிகள் கூறுவதை Online etymology Dictionary காட்டுகிறது.*

## பாவாணரின் தெளிந்த ஆய்வு

*மாந்தனைக் குறிக்கும் man என்னுஞ் சொல் மகன் என்பதன் திரிபு எனப் பாவாணர் மகன் என்னும் தன் கட்டுரையில் தெளிவுறக் கூறியுள்ளார். மேலும் சிந்தித்தல் மற்றும் எண்ணுதல் பொருள் கொண்ட தொல் இந்தோ ஐரோப்பிய வேரான ★men என்பதற்கு, முன் என்னும் தென்சொல் வேரின் திரிசொல் என்று Online Etymology Dictionary வெளிவருவதற்கு முன்னரே பாவாணர் வேறுபடுத்தியுள்ளார்.ஓரறிவுக்கு மேம்பட்ட உயிரினங்கட்கெல்லாம் கருத்துப் புலன் இருப்பதால், man - thinking animal என்பது பொருந்தாது என்பது பாவாணரின் கருத்து. இக்கருத்தையே Online Etymology Dictionary கீழ்க்கண்டவாறு தெளிவுபடுத்துகிறது.*

man (n.)

"a featherless plantigrade biped mammal of the genus Homo" [Century Dictionary], Old English man, mann "human being, person (male or female); brave man, hero;" also "servant, vassal, adult male considered as under the control of another person," from Proto-Germanic *mann-(source also of Old Saxon, Swedish, Dutch, Old High German man, Old Frisian mon, German Mann, Old Norse maðr, Danish mand, Gothic manna "man"), from PIE root *man- (1) "man." For the plural, see men.

Sometimes connected to root *men- (1) "to think," which would make the ground sense of man "one who has intelligence," but not all linguists accept this.

*மக்கள் பலர் கூடி விளையாடிக் களிப்பதையே, தமிழ் வழி பிறந்த இந்த Game சொல்லும் குறிப்பதைக் கண்டு மகிழலாம்.*

## பின்னிணைப்பு

1. AJA (Mother, older female relative)2. BU (N) KA (knee, to bend)3. BUR (Ashes, dust)4. KOLO (hole)5. KUAN (dog) 6. KUNA (woman)7. MAKO (child)8. MALIQA (so suck, suckle, nurse,breast.9. MANA (to stay in a place, permanent)10.MANO (man)11. MENA (to think about)12. Pal (2)13. PAR (to fly)14. PUTI (vulva)15. TEKU (leg, foot)16. TIK (finger, one)17. TIKA (earth) ■

# திராவிடப்பண்பாட்டில் ஒற்றுமை காட்டும் சொற்கள்

முனைவர் **வே. அருட்பாமணி**
உதவிப் பேராசிரியை, தமிழ்த்துறை,பச்சையப்பன் மகளிர் கல்லூரி, காஞ்சிபுரம்.



பழந்தமிழரின் வரலாற்றையும் பண்பாட்டையும் அறிந்துகொள்வதற்குப் பெரிதும் பயன்படுவன சங்க இலக்கியங்கள். தமிழரின் அகத்தையும், புறத்தையும் காட்டும் வேர்கள் இவை. தொல்லியல், மானுடவியல், அகழ்வாய்வியல் மூலம் பழந்தமிழரின் பண்பாட்டு வேர்களை நாம் காண முடியும். “மனித இனத்தின் தொட்டில் லெமூரியா” என்பார் ஹெக்கல். அறிஞர் வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர் முதலினம் தமிழினம், முதன்மொழி தமிழ்மொழி என்று கூறுகிறார்.

மடகாசுகர் தீவின் பழைய பெயர் கோமார், இங்கு வாழ்ந்தவர் கோமாரி என்று அழைக்கப்பட்டனர். பழைய இனத்தின் பெயர் கொம்ரி. குமரிக்கண்டம் என்னும் பெயரினையும் நாம் இணைத்து ஆராய்ந்தால் நம் வரலாற்றின் புதிய வேர்கள் கிடைக்கும். பண்பாடு என்பது பொதுவாக மனிதச் செயற்பாட்டுக் கோலங்களையும், சிறப்புத் தன்மைகளையும், குறியீட்டு அமைப்புகளையும் குறிக்கின்றது. பண்பாடு ஒரு பல் இலக்கியக் கருப்பொருள்.

ஒரு குழுவின் வரலாறு, பண்புகள், போக்குகள், அறிவுப் பரவல்கள், வாழ்வியல் நெறிகள், சமூகக் கட்டமைப்பு எனவும், சமயம், தொழில் எனவும் கூறலாம். தமிழர் பண்பாடு பல காலமாகப் பேணப்பட்ட, திருத்தப்பட்ட மேம்படுத்தப்பட்ட அழகுகளைக் குறித்து நின்றாலும் அது தொடர் மாற்றத்துக்கு உட்பட்டு நிற்கும் ஒரு இயங்கியல் பண்பாடே.

தமிழர் பண்பாட்டின் அமைப்பொழுங்கானது இரண்டு அழகுகளைக் கொண்டதாகும். ஒன்று அதனளவில் சார்புடையது. மற்றொன்று உலகளாவிய அமைப்பியல்களோடு பொருந்தக்கூடியது.

தமிழர் பண்பாட்டின் உருவகத்தைத் தரக்கூடிய புறக்கூறுகள் பண்பாடு சார்ந்தும், அறக்கூறுகள் உலகளாவிய அமைப்புகளோடு ஒத்திசைவு பெற்றும் உள்ளன. பாவாணர் கூறுவது போலப் பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம்.

திராவிட மொழிக்குடும்பம் என்பது கிட்டத்தட்ட 85 மொழிகளை உள்ளடக்கியது ஆகும்.

தென்னிந்தியாவைச் சேர்ந்த முக்கிய மொழிகளான தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்பன ஒன்றுடன் ஒன்று நெருங்கிய தொடர்புகளைக் கொண்டுள்ளன. பேச்சுவழக்கில் அதிகம் பயன்படும் பொருள்களைக் குறிப்பவை அடிப்படைச் சொற்கள் ஆகும். இவை மொழிக்கு மொழி வேறுபடுகின்றன.

எனினும், திராவிட மொழிகள் அனைத்திலும் அடிப்படைச் சொற்கள் பொதுவாக மாறாமல் ஒன்று போலவே உள்ளன.

சான்று:

| | | |
|---|---|---|
| **தமிழ்** | – | **கண்** |
| **கன்னடம், மலையாளம்** | – | **கண்ணு** |
| **தெலுங்கு** | – | **கன்னு** |
| **தோடா** | – | **கொண்** |
| **கொடகு** | – | **கன்னு** |
| **பர்ஜி** | – | **கெண்** |
| **குரூக்** | – | **ஃகன்** |

தமிழ்ப் பண்பாடு ஆரம்பத்தில் நிலப்பகுதிகளின் அடிப்படையில் தோன்றினாலும் இன்றைய நிலையில் பழக்கவழக்கம், பண்பாடு, உணவு, உடை, விளையாட்டு, வழிபாடு, சிந்தனை, அறிவியல் என விரிகிறது.

அம்மா, பூவும்பொட்டும், திருமணம், சுவாமி, தாலி, சேலை, வேட்டி, பூசை, தோசை, வடை, ஞானஸ்நானம், தர்கா, குருதட்சணை, குலதெய்வம், சீத்தனம், சோதிடம், எட்டாம்நாள் போன்ற சொற்கள் தமிழ்ப் பண்பாட்டை வெளிப்படையாக உணர்த்தும் சொற்களாக உள்ளன.

எண்களைக் குறிப்பன எண்ணுப்பெயர்கள். இவை ஏறத்தாழத் திராவிட மொழிகள் எல்லாவற்றிலும் ஒன்று போலவே அமைந்துள்ளன.

சான்று:

| | | |
|---|---|---|
| **தமிழ்** | – | மூன்று |
| **மலையாளம்** | – | மூ |
| **கன்னடம்** | – | மீ |
| **தெலுங்கு** | – | மூடு |

காது – செவி, உள்ளே –அகத்து, வெளியே–புறத்து, பக்கத்து –அருகில், கூப்பிடு –விளி, வெட்கம்–நாணம், வேலை–பணி, சண்டை–பிணக்கு, பார்–நோக்கு, எப்படி–எங்ஙென. இவை தமிழ் பேச்சு வழக்கும் அவற்றுக்கான மலையாளச் சொற்களும் ஆகும்.

மலையாளத்தில் நேற்று என்பதைக் குறிக்கும் இன்னலெ என்ற சொல் அதே பொருளுடைய பழந்தமிழ் சொல்லான நென்னல் என்பதன் திரிபு ஆகும். திராவிட மொழிகளுள் மூலதிராவிட மொழியின் வடிவத்தையும் மொழிக் கூறுகளையும், வேர்களையும் பெருமளவில் கொண்டுள்ள மொழி தமிழே.

இத்தகைய தொன்மைச் சிறப்பும் தலைமைச் சிறப்புமே தமிழை இன்று உயர்தனிச் செம்மொழியாக நிற்கச் செய்துள்ளன. ■

# எழுகுளிறு? எழுகுளிர்? எழுகளிறு?



முனைவர் ச.கண்ணதாசன்
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, மதுரைக்கல்லூரி, மதுரை – 625011.

“கருங்கால் வேம்பி னொண்பூ யாணர்
என்னை யின்றியும் கழிவது கொல்லோ
ஆற்றய லெழுந்த வெண்கோட் டதவத்
தெழுகுளிறு மிதித்த வொருபழம் போலக்
குழையக் கொடியோர் நாவே
காதல ரகலக் கல்லென் றவ்வே”

எனும் குறுந்தொகை 24 ஆம் பாடலின் ஆசிரியர் பரணர். பாலைத்திணையில் தலைவி கூற்றாகப் பருவங்கண்டு ஆற்றாலாகிய கிழத்தி உரைத்தது எனும் துறையில் அமைந்தது. (இங்கு உ.வே.சா.வின் பதிப்பில் உள்ளபடி கொடுக்கப்பட்டுள்ளது) இப்பாடலில் நான்காம் அடியாக அமைந்த “எழுகுளிறு மிதித்த ஒருபழம் போல” என்பதே இங்கு மையப்பொருள். இவ்வடியில் இடம்பெற்றுள்ள ‘எழுகுளிறு’ என்பதே ஆய்வுப்பொருள். குறுந்தொகையின் முதற் பதிப்பாசிரியரான சௌரிப்பெருமாள் அரங்கன், விரிவான உரை கண்ட உ.வே.சாமிநாதையர், கழக உரையாசிரியர் பொ.வே.சோமசுந்தரனார், விளக்கவுரை கண்ட ரா. இராகவையங்கார், செம்பதிப்பென மூலத்தை வெளியிட்ட எஸ்.வையாபுரிப்பிள்ளை, பல்வேறு சுவடிகளை ஒப்புநோக்கி ஆய்வுப் பதிப்பாக வெளியிட்ட மு.சண்முகம் பிள்ளை ஆகியோர் இவ்வடியைக் கையாண்டுள்ள விதம் கீழ்க்காணுமாறு அமைந்துள்ளது.

“எழுகளிறு மிதித்த ஒருபழம் போல”
– சௌரிப்பெருமாள்

எழுகுளிறு மிதித்த ஒருபழம் போல”
– உ.வே.சா.

எழுகளிறு மிதித்த ஒருபழம் போல”
– மு.சண்முகம்பிள்ளை

எழுகுளிர் மிதித்த ஒருபழம் போல”
– பொ.வே.சோமசுந்தரனார்

எழுகுளிறு மிதித்த ஒருபழம் போல”
– எஸ்.வையாபுரிப்பிள்ளை

எழுகுளிர் மிதித்த ஒருபழம் போல”
– ரா.இராகவையங்கார்

மேற்கூறிய உரையாசிரியர்களின் பாடங்களையும் பாடபேதங்களையும் தொகுத்துப் பார்க்கும்போது இப்பாடலுக்கு மொத்தம் ‘எழுகுளிறு, ‘எழுக்குளிறு’, ‘எழுகளிறு’, ‘எழுக்குளிறு’, ‘எழுகுளிர்’ என மொத்தம் ஐந்து பாடங்கள் இருப்பதை அறியமுடிகிறது.

“கரிய தாளினை உடைய வேப்ப மரத்தினது ஒள்ளிய பூவின் புது வருவாயானது என்னுடைய தலைவன் இல்லாமலும் செல்வதோ. அயலாராகிய கொடிய மகளிருடைய நாக்கள் என் காதலன் என்னை நீங்கிச் செல்ல, ஆற்றங்கரையில் வளர்ந்த வெள்ளிய கொம்புகளை உடைய அத்திமரத்தினது உண்ண விரும்பிய ஏழு நண்டுகளால் மிதிக்கப்பட்ட ஒற்றைப் பழம் குழைவது போல நான் வருந்தும்படி கூறி கல்லென்று முழங்கின” என்பது இப்பாடலுக்கு உ.வே. சாமிநாதையர் தரும் விளக்கம். ‘எழுகுளிறு மிதித்த’ என்று பாடம் கொண்டு உரை எழுதியுள்ளார் அவர்.

‘எழுகுளிர்’ எனப் பாடம்கொண்ட பொ.வே.சோமசுந்தரனாரும், இராகவையங்காரும் இன்னும் சற்று நுட்பமாக “ஏழு நண்டுகள் பற்றிக் குழைத்த” எனப் பொருள்கண்டுள்ளனர். இவர்களுக்கும் நண்டுகள் என்பதில் மாற்றுக் கருத்துகள் இல்லை, ஆயின் ‘குளிறு’ என்பது ‘குளிர்’ என்று கொள்ளப்பட்டுள்ளது.

‘களிறு’ எனப் பாடங்கொண்டவர்களுள் சௌரிப்பெருமாள் அரங்கன் “ஆற்றில் மூழ்கி எழுந்த களிறு மிதித்திட்ட ஒரு பழம் போல” என்றும், சண்முகம்பிள்ளை “ஆண்யானையின் காலால் மிதித்து உழக்கப்பெற்ற” என்றும் பொருள் கூறியுள்ளனர். மேலும் இவர்கள் ‘எழு’ என்பதை ஏழு என்னும் எண்ணுப்பெயராகக் கொள்ளாமல் எழுகின்ற எனும் வினையாகக் கொண்டுள்ளனர். களிறு உருவத்தில் பெரியது என்பதால் ஏழு எனப் பொருள் கொள்வதில் இடர்ப்பாடு ஏற்படுகின்றது.

## ‘எழுகளிறு’ பொருத்தமானதா?

‘எழுகளிறு’ அல்லது ‘எழுக்களிறு’ என்ற பாடம் பொருந்துமா என்பதை ஆராயவேண்டும். பாடலின் சூழல் ஊரார் அலர் தூற்றுவதால் மனதளவில் மிகுந்த துன்பத்தை அனுபவிக்கும் தலைவியின் புலம்பலை வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது. தலைவியின் மனமானது பதறுகிறது; கவலைகொள்கிறது; வருந்துகிறது. அதனால் மனம் வண்டுகளால் உருட்டப்பட்ட அத்திப்பழம் போல அங்கும் இங்கும் அலைபாய்கிறது என்று கொள்வது பொருத்தமாகும். அல்லது வண்டுகளால் அத்திப்பழம் உருட்டப்படுவதைப் போல அவள் மனமும் உடலும் தலைவனின் நினைவுகளால் பந்தாடப்படுகிறது என்பதும் பொருத்தமாக அமையும்.

யானை ஆற்றிலிருந்து எழுந்து வந்து வேண்டுமென்றே அத்திப் பழத்தை மிதிப்பதில்லை. பெரிய உருவம் கொண்ட அது தெரியாமல் கூட பழத்தை மிதித்திருக்கும். அலர் கூறுபவர்கள் தலைவியின் காதில் படவேண்டும் என்று வேண்டுமென்றே தெரிந்தும் தெரியாததுபோல் அவள் மனம் புண்படும்படி கூறுவர் என்பதே இயல்பு. யானை மிதித்தால் அத்திப்பழம் சிதையுமே தவிர குழையாது. ஒட்டுமொத்தமாக அழிவதை விட மெள்ள மெள்ளச் சிதைதல் என்பது கொடியது; துன்பத்தை

அதிகரிக்கச் செய்வது. நண்டுகள் உருட்டுவதால் பழம் படும் பாட்டை நண்டுகள் அறியாதது போல் அலர் தூற்றுவதால் என் மனம் படும்பாட்டை இவ்வூரார் அறியார் எனத் தலைவி எண்ணுவதாலேயே "குழையக் கொடியோர் நாவே" என்று கூறுகிறாள் என்றும் கூறலாம்.

எனவே 'நண்டு' என்று பொருள் கொள்வதே சரியானதாக அமையும்.

"உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும்" என்பது தொல்காப்பிய விதி. இவற்றின் அடிப்படையில் பார்த்தாலும் 'களிறு' எனப் பாடங்கொள்ளுதலும், அதற்குக் கொடுக்கப்பட்ட விளக்கங்களும் பொருத்தமுடையனவாக இல்லை.

" 'எழுகளிறு' எனப்பாடம் கொண்டு ஏழு யானைகள் என்பாரும் உளர். ஏழு யானைகள் மிதிப்புழிப் பழம் உருத்தெரியாமல் சிதைந்தழியுமாயின் குழைந்தது எனப் பொருந்தாதல் உணர்க" என்ற பொ.வே.சோமசுந்தரனாரின் கூற்றும் ஒப்புநோக்கத்தக்கது. எனவே 'எழுகளிறு' என்னும் பாடம் பொருத்தமாக அமையவில்லை. எனவே 'எழுக்களிறு' என்பதும் இங்கே ஏற்புடைத்தாகாது.

## 'எழுகுளிறு' அல்லது 'எழுகுளிர்' ?

'களிறு' என்பது பொருந்தாப் பாடமாக அமையும் பொழுது, 'குளிறு' அல்லது குளிர் இவற்றுள் எது பொருத்தாமான பாடமாக அமையும் என்பதை ஆராய வேண்டும். 'ஏழுகுளிறு' எனப் பாடம் கொண்ட உ.வே. சா. நண்டு அத்திப்பழத்தை விரும்புவதற்கு வழக்கம் போல் தன்னுடைய ஒப்புமைப் பகுதியில் அதற்கான பிற இலக்கிய மேற்கோள்களை எடுத்துக்காட்டிள்ளார்.

'நண்டு' எனப் பொருள் கொள்வதில் உ.வே.சா., பொ.வே.சோ., வையாபுரிப்பிள்ளை, இராகவையங்கார் ஆகியோருக்கு மாற்றுக் கருத்து இல்லை. ஆனால் குளிறா? குளிரா? என்பதில்தான் மாறுபடுகின்றனர். முன்னோர் 'குளிறு' என்றும் பின்னோர் 'குளிர்' என்றும் எடுத்தாண்டுள்ளனர்.

" 'குளிர் – நண்டு என்பது,

"களவன் குளிர் நெண்டு கற்கடக மட்டை

செளுகங் கறையான் சிதல்

(உரிச்சொனிகண்டு,விலங்கு, 26),

குளீர– கற்கடக என்பது அமரகோசம், இவற்றால் குளிறு என்பது நண்டின் பெயரன்மை உணரலாம்"

என்று விளக்கம் கூறி 'குளிர்' எனக் கொள்வதே சரியான பாடம் என்கிறார் இராகவையங்கார். பொ.வே.சோ. 'களிறு' என்பதற்கே மறுப்புரை எழுதியுள்ளாரே தவிர 'குளிறு' என்பதற்கு எழுதவில்லை.

மேல் இராகவையங்கார் சுட்டிக்காட்டியதைப் பிற நிகண்டுகளின் துணைகொண்டும் ஆராய வேண்டியுள்ளது. ஏனெனில் அகராதிகளும், சொல்லடைவுகளும் வருவதற்கு முன்பாக நிகண்டுகளே முதன்மையான பொருள்விளக்கிகளாக இருந்துள்ளன.

குளிர் என்பதற்குச் சூடாமணி நிகண்டு,
"ஞெண்டின் பெயர் களவன், குளிரம், நள்ளி, கவைத்தாள், கர்க்கடகம்" என்று பொருள் தருகின்றது சேந்தன் திவாகரம்,
"அலவன், நள்ளி,குளிர், ஞெண்டு, ஆர்மதி
களவன் என்றிவை கர்க்கடகப் பெயரே"
என்று நண்டிற்குரிய வேறு பெயர்களை எடுத்தியம்புகின்றது. மேல் காணப்பட்ட இரண்டிலுமே 'குளிரம், குளிர்' ஆகிய சொற்கள் இடம்பெற்றுள்ளன. 'குளிறு' எனும் சொல் இடம்பெறவில்லை.

அடுத்ததாக, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி,"குளிர்–நண்டு (பிங்கலம்),குளிர்– வெண்குடை, மீனொழுங்கு (சூடாமணி), குளிர்– கர்க்கடகராசி (திவாகரம்)", "குளிறு –ஒலி (சூடாமணி)" என்று குளிர், குளிறுஆகியவற்றிற்குரிய பொருள்களை எடுத்துரைக்கின்றது.

இங்குக் கூறப்பட்டுள்ள நிகண்டுகள் 'குளிர்' என்பது நண்டு எனும் பொருளுடைத்தே எனக் கூறுவதன் மூலம், மேல் 'குளிறு' என்பதைப் பாடம் கொள்வதில் இடர்ப்பாடு ஏற்படுகிறது.

இதனால், உ.வே.சா.வும், வையாபுரிப்பிள்ளையும், 'குளிறு' எனப் பாடங்கொண்டுள்ளது ஏற்புடையதாக இல்லை. நிகண்களுக்குப் பின்னால் வந்த தமிழ் –தமிழ் அகரமுதலி, சங்க இலக்கியச் சொல்லடைவு, கழக அகராதி, சங்க இலக்கியச் சொல்லகராதி போன்றவற்றில்தான் 'குளிறு' என்பதற்கு 'நண்டு' எனப் பொருள் கொள்ளப்பட்டுள்ளது.

ஆனால் சண்முகம் பிள்ளையால் உருவாக்கப்பட்ட தமிழ்–தமிழ் அகரமுதலி "குளிறு – ஒலி" என்றே பொருள் தருகின்றது. ஒலி எனும் பொருள் மட்டுமன்றி அதன் வினைமரபுப் பொருள்களும் 'குளிறு' வந்துள்ளதைக் கம்பனின்வழி அறியமுடிகிறது.

"குளிறு கோப வெங் கோள் அரிமா அட" (ஆரண்யகாண்டம் 6;212)

"கோடணை முரசினம் குளிறு சேனையர்" (ஆரண்யகாண்டம் 6;512)

"குளிறு தேர் கடிது ஓட்டினன் தூடணன் கொதித்தான்" (ஆரண்யகாண்டம் 6;1554)

(இவை கோவை கம்பன் அறநிலைப் பதிப்பிலிருந்து எடுத்தாளப்பெற்றவை)

இவற்றுள் முதல் அடிக்கு "கர்ச்சிக்கின்ற சினத்தை உடைய வலிய சிங்கம்" என்றும் அடுத்துள்ள 'குளிறு சேனையர்' என்பதற்கு 'முழங்குகின்ற சேனையை உடையவர்களாய்" என்றும் இறுதியாக உள்ள 'குளிறு தேர்' என்பதற்கு 'முழக்கம் செய்கின்ற தேர்' என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் 'குளிறு' எனும்சொல் குறுந்தொகையைத் தவிர ஏனைய நூல்களில் இடம்பெறவில்லை என்பதைச் சங்க இலக்கியச் சொல்லடைவு "குளிறு குறுந்.: 24" என்று குறிப்பதன் வழி அறியமுடிகிறது.

இதனால் உ.வே.சா.வும் வையாபுரிப்பிள்ளையும் 'குளிறு' என்று பொருள் கொண்டு பதிப்பித்ததற்குப் பின்பே இச்சொல் அகராதிகளுள் இடம்பெற்றுள்ளது எனக் கூறலாம்.

இக்கருத்துகளை எல்லாம் வைத்துப் பார்க்கும் பொழுது உ.வே.சா.வும், வையாபுரிப்பிள்ளையும் கொண்டுள்ள 'எழுகுளிறு' எனும் பாடம் ஏற்புடையதாக அமைய வில்லை. பொ.வே.சோ.வும் இராகவையங்காரும் கொண்ட 'எழுகுளிர்' என்பதே பொருத்தமாக அமைகிறது. ■

# திரைகடல் ஓடி சொற்களைத் தேடி

கட்டுரையாளர்: **நீச்சல்காரன்,** வாணி பிழைதிருத்தி உருவாக்குநர்

## கவித்தமிழ்

எப்போதுமே கவிதைகளில் தமிழ் மேலும் அழகாகத் தோன்றும். ஒவ்வொரு கவிஞரும் கற்பனையின் உச்சத்தில் சொற்களை உருவாக்குவார்கள்.



நீச்சல்காரன்

புதுக் கவிதைகளின் வரவாலேயே தமிழ் மீது ஆர்வம் கொண்டோர் உண்டென்றால் அது மிகையில்லை. குறிப்பிட்ட கவிஞர் என்றில்லாமல் பொதுவாகத் தமிழ் திரையிசைப் பாடல்களில் எவ்வாறெல்லாம் சொற்கள் கையாளப்பட்டுள்ளன என்று பார்க்கவேண்டும்.

உதாரணமாக, குயில் என்ற ஒரு சொல் சுமார் அறுபது வகையாக சொல்லாக்கப்பட்டுள்ளதைக் காணலாம். உறவுகளைச் சொல்லும் வகையில் அன்னைக் குயில், தந்தைக் குயில், பிள்ளைக் குயில் என்றும், நிறத்தில் சொல்லும் போது கறுத்த குயில், வண்ணக் குயில், நீலக் குயில், பச்சைக் குயில், மரகதக் குயில், கருங்குயில் என்றும், இடத்தைக் குறிப்பிட்டு தென்னங்குயில், மாங்குயில், பூமரக் குயில், பூங்குயில், சோளக் குயில், நந்தவனக் குயில், சோலைக் குயில், வனக்குயில், காட்டுக்குயில், செம்மாங்குயில் என்றெல்லாம் தமிழ்ப் பாடல்களில் வந்துள்ளன.

மேலும் பாடலுக்கு உரித்தான உவமைகளுடன் இன்னிசைக் குயில், சங்கீதக் குயில், இசைக் குயில், பாட்டுக்குயில், கானக் குயில், ஊமைக் குயில் போன்ற சொற்களும் காணக் கிடைக்கின்றன.

பறவையியலில் செங்குயில், புள்ளிக்குயில், வரிக்குயில், கள்ளிக்குயில் போன்ற இனங்களுக்குக் கலைச் சொற்கள் இருந்தாலும் இவை பாடலில் இடம் பெற்றதாகத் தெரியவில்லை.

ஆனால் அரண்மனைக் குயில், ஊர்க் குயில், ஓடைக் குயில், தேன் குயில், உல்லாசக் குயில், அந்திக் குயில், பேடைக் குயில், கண்ணீர்க் குயில், காதல் குயில், ஆனந்தக் குயில், பருவக் குயில், தேவக் குயில், செல்லக் குயில், கேரளக் குயில், சிங்காரக் குயில், கவிக் குயில், கோலக் குயில், ஜோடிக்குயில், அன்புக் குயில், சுகக் குயில், சிறு குயில், மன்மதக் குயில், கூட்டுக் குயில்,புதுக் குயில், கன்னிக் குயில், இளங்குயில், மணிக்குயில் என்று கவிஞர்களின் கற்பனை நீள்கிறது.

## அயலகத் தமிழ்

இலங்கைத் தமிழில் மருத்துவக் கலைச்சொற்கள் சற்று வேறுபட்டதாக உள்ளன. மருத்துவம் என்பதைப் பொதுச் சொல்லாகக் கொண்டு மருத்துவ சங்கம், மருத்துவ சேவை போன்று வழக்கில் இருந்தாலும் இங்கே தமிழகத்தில் மருத்துவமனை, மருத்துவக் கல்லூரி, மருத்துவர், செவிலியர் போன்றவை அங்கே முறையே வைத்தியசாலை, போதனா வைத்தியசாலை, வைத்தியர், தாதியர் என்று வழங்கப்படுகின்றன. மருத்துவமனை இயக்குநர் என்பதனை அங்கே வைத்தியசாலை பணிப்பாளர் என்கின்றனர். Director General என்பது இங்கே தலைமை இயக்குநர் அங்கே பணிப்பாளர் நாயகம் என்று புழங்கப்படுகின்றது. இலங்கை ஊடகங்களில் நோயாளி என்பதைவிட நோயாளர் என்று பரவலாகப் பயன்படுகின்றன.

தமிழகத்தில் கொரோனா 'தொற்று பாதிக்கப்பட்டுள்ளோர்' அல்லது 'தொற்று உள்ளவர்' என்றே எழுதி வருகிறோம் ஆனால் இலங்கை ஊடகங்கள் 'தொற்றாளர்' என்ற கலைச் சொல்லைக் கையாளுகின்றனர்.

### மேலும் சில:

சுதேச மருத்துவத் திணைக்களம் - Department of Indigenous Medicine

சுகாதாரத் திணைக்களம் - Department of Health

மருந்தகவியல் - Pharmacy

மருத்துவமாணி சத்திர சிகிச்சைமாணி - Bachelor of Medicine and Surgery (MBBS)

சித்த மருத்துவமாணி சத்திர சிகிச்சைமாணி- Bachelor of Sidhha Medicine and Surgery(BSMS)

## வழக்குத் தமிழ்

பொதுவாகச் சில சொற்களுக்குப் பன்மை என்பது இல்லாமல் இருக்கும். உதாரணமாக உணவு, காவல்துறை, தொடர் கதை, செய்தி, கால்நடை, நீர், அரிசி, நெல் என்று குறிப்பிடலாம். நடைமுறையில் இவை எண்ணிக்கைக்குள் அடங்குவதில்லை. மாறாக அளத்தல் அல்லது நிறுத்தல் போன்ற வேறு அளவைகளில் கணக்கிடப்படுபவை.

அதே வேளை வேறு இரு வகையைக் குறிக்கும் போது பன்மை விகுதி பெறும். ஆங்கிலத்தில் fish என்பது ஒருமைச் சொல்லாகவும் பன்மைச் சொல்லாகவும் பயன்படும். பல வகை மீன்களைக் குறிக்கும் போது fishes என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

அதுபோல பல உணவு வகை என்றால் உணவுகள் எனலாம். பல வகை மீன் வகை என்றால் மீன்கள் எனலாம். ஒரே வகை மீனைப் பன்மைச் சொல்லாக மீன்கள் என்று வழங்கும் முறையில்லை. ஆனால் தற்காலத்தில் மீன்கள் என்ற வழக்கு ஒரே மீனுக்கும் பன்மையாகப் பயன்படுகிறது. ■

# பேச்சு வழக்கும் இலக்கிய வழக்கும்




**முனைவர் து. பத்மபிரியா**
உதவிப் பேராசிரியை, தமிழ்த்துறை,
பச்சையப்பன் மகளிர் கல்லூரி, காஞ்சிபுரம்.


## நோக்கு :

மொழி என்பது காலந்தொட்டு மனிதனால் உருவாக்கப்பட்டு வளர்ந்து வந்தது. காலப்போக்கில் எழுத்துவழக்கானது படிப்படியாகப் பேச்சுவழக்காக மாற்றம் பெற்ற நிலையில் கற்றறிந்தோரின் இலக்கியப் பேச்சானது மக்களைக் கவர்ந்தது. இருப்பினும், அந்த இலக்கிய வழக்கும் மக்களின் உச்சரிப்பில் தன்னுடைய மரபுகளைத் தொலைத்து பாமர பேச்சானது அந்த வழக்கில் இடம் பெற்றது. அந்தச் சொல்லைப் பயன்பாட்டு நிலையில் அதனுடைய செலவாணியை வைத்துத்தான் மதிப்பிட முடியும்.

நாம் சொல்லும் சொல்லானது கேட்பவருக்கு விளங்குகின்றதா என்பதுதான் முக்கியம். தமிழின் வளர்ச்சிபோலவே பேச்சுவழக்கின் வளர்ச்சியும் மாறிக்கொண்டேதான் இருக்கின்றது.

இம்மாற்றங்களைக் கண்டு வருத்தப்பட்டாலும் வாழும் மொழிக்கு இவை இயல்பு எனக் கருதி அம்மாற்றத்தில் மகிழ வேண்டும். ஒரு பேச்சுவழக்கின் மாற்றங்களை அறிவோம்.

## போக்கு:

உடல் நலம் குறைந்தவர்களைப் பார்த்தால் இப்போ "தாவிலையா?" என்று கேட்பது வழக்கம். இது இப்பொழுது மாற்றித் "தேவலையா?" என்று வழங்குவதுண்டு. தேவலைக்கு மூலச்சொற்கள் எங்கும் இல்லை. தா= குற்றம், பழுது, கேடு.

இப்பொழுது அவ்வளவு கேடாக இல்லையே! நோயாக இல்லையே? என்று வினவுவது ஆகும். "தொட்டியில் தண்ணி ரொம்பிவிட்டது" என்கிறோம். "ரொம்ப நல்ல பழம்" என்றும் கூறுகிறோம். நிரம்ப என்பதைப் பேசும்போது இப்படி மாற்றிவரு கிறோம்.

மாணிக்கவாசகர் இறைவனை, 'நிரம்ப அழகியர், நீத்த மணாளர்' என்பார். இதை நினைவுபடுத்தினாலும் நிரம்ப என்பதை ரொம்ப என்று கூறுவதிலே மகிழ்கின்ற னர்.

அதேபோல் சில ஊர்ப் பெயர்களும் மருவி பேச்சுவழக்காயின. உதாரணமாக மதுரை மீனாட்சி கோயிலைச்சுற்றியுள்ள நிலங்கள் இறையிலி நிலங்களாக விடப்பட்டன. அங்குள்ள கிராமங்களின் பெயர்கள் பின்வருமாறு மருவி வழங்குகின்றன.

பிராட்டிபற்று >விராட்டிபத்து

அச்சன்பற்று > அச்சம்பத்து

இதில் பற்று என்பது வயலைக் குறிக்கும்.

பெருமாட்டி > பிராட்டி என்றும் அச்சன் >அத்தன் = தலைவன் (சிவபெருமானைக் குறிக்கும்) என்றும் மாறி விராட்டிபத்து, அச்சம்பத்து என்று வழங்கி வருகின்றன.

முப்பது என்ற எண்ணை மக்கள் உச்சரிக்கும்போது நுப்பது என உச்சரிக்கின்றனர். முப்பது என்பது தான் பொருட்பொருத்தமுள்ள முறையான வழக்கு மூன்று + பத்து = முப்பது, மூன்று + தமிழ் = முத்தமிழ், மூன்று + மொழித்திட்டம் = மும்மொழித்திட்டம் ஆவதைப் போல முப்பது நுப்பதாகிவிட்டது. அது மட்டுமன்று

**யாட்டு – யாண்டு – ஆண்டு**

**வெட்கம் –வெக்கம்**

**அராவு –இரவு**

**வாயில் –வாசல்**

என்று மக்கள் தம்முடைய பேச்சுவழக்கில் இலக்கிய வழக்கை மாற்றி உச்சரித்து வருகின்றனர். இருப்பினும், அதன் பொருள் மாறாதவரை இம்மாற்றத்தை மகிழ்வுடன் ஏற்று மொழியினை நம் கண் போல் போற்றிப் பாதுகாக்க வேண்டும்.

எத்துணை வழக்கம் மாறுதல் ஏற்பட்டாலும் அத்துணையும் தமிழ்மொழியின் வேர்ச்சொல்லிலிருந்துதான் வந்துள்ளது என்பதனை முதலில் நன்கு அறிந்துகொள்ள வேண்டும்.

காலமாற்றங்களுக்கு ஏற்ப மொழியும் அசுர வளர்ச்சியடைந்து தமிழுக்கென்று தனியிடத்தை இந்த தரணியில் தக்கவைத்துக் கொண்டுள்ளதை எண்ணி அனைவரும் பெருமிதம் கொள்ள வேண்டும்.


**துணை நூற்பட்டியல்**
**வளர்தமிழ்**
**உங்கள் தமிழைத் தெரிந்து கொள்ளுங்கள்**
ஆசிரியர் – **தமிழண்ணல்**
முதற்பதிப்பு – அக்டோபர் 1989
மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக்கோபுரத் தெரு,
மதுரை 625 001.



## மாணவர் பக்கம்:

# கலைச் சொற்களின் இன்றியமையாமை

மொழியென்பது ஒலியின் ஊடாகப் பிறக்கிறது என்று குறிக்கப்படுகின்றது.ஒரு மொழியின் வளர்ச்சி என்பது பல கூறுகளைக் கொண்டு கவனிக்கப்பட்டு வருகின்றது.

அவ்வகையில் நம்முடைய தமிழ் மொழியின் மிகப் பெரிய செல்வமே சொல்வளம்தான். வேற்றுமொழிச் சொற்களைத் தமிழில் மாற்றவும், புதுப் பெயர்களைத் தமிழ்ப் பெயர்களாக அமைத்துக் கொள்ளவும் கலைச்சொல்லாக்கம் பயன்பட்டு வருகிறது.



ம.இலக்கியவாணன்

ஒரு மனிதன் எல்லாவிதக் கருத்துகளையும் எந்த மொழிகளின் துணையுமின்றித் தன்னுடைய தாய் மொழியிலே பெறுவதற்காகவே கலைச்சொல்லாக்கம் கண்டறியப்பட்டது. புதுமை,எளிமை எனப் பலவகை நிலைகளைத் தாண்டியே ஒரு கலைச்சொல் பிறக்கின்றது. அப்படி உருவாக்கக்கூடிய கலைச்சொற்கள் எல்லா மனிதர்களுடைய நாவிலும் தவழ்வதே அந்தக் கலைச்சொல்லின் முழுமையான வெற்றியாகும்.

சமூக ஒழுக்கத்திற்கான விதிமுறைகளை வகுத்து, மக்களின் நல்வாழ்விற்கான வழிகாட்டுதல்களையும் கொடுத்து நேர்ப்படுத்துவதில் சட்டத்துறை மிக முக்கிய பங்கினை வகிக்கிறது. சட்டக் கருத்துகளைத் தமிழில் மொழிபெயர்க்கும் போது மிகக் கவனத்துடன் செயல்பட வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது.

ஓர் ஆங்கிலச் சொல்லுக்குப் பல இணைச் சொற்கள் தமிழில் இருந்தாலும், சூழலுக்கு ஏற்றவாறு பொருத்தமான சொற்களைப் பயன்படுத்துவதே சிறப்பாகும். எடுத்துக்காட்டாக, "Pending" என்ற ஆங்கிலச் சொல்லைச் சட்டத்துறையினர் "நடப்பிலிருக்கின்ற" அல்லது "முடிவுறாதிருக்கின்ற" என்று பயன்படுத்துகின்றனர். அதே சொல்லை வருவாய்த்துறையினர் "நிலுவை" என்று கூறுகின்றனர்.

அறிவியல் துறை இன்று உலக வாழ்க்கைக்கான ஆதாரமாகவும் ஆணி வேராகவும் விளங்கி வருகிறது. அறிவியல் செய்திகளை மொழிபெயர்க்கும் போது ஓசை நயம் மிக்க சொற்களையும்,மயக்கம் தரக்கூடிய சொற்களையும் தவிர்த்தல் நல்லது. இருபொருள் தரக்கூடிய சிலேடைகள் முற்றிலும் தவிர்க்கப்படவேண்டும். குறியீடுகளை அப்படியே பயன்படுத்தவேண்டும். அறிவியல் பெயர்ச் சொற்களை அப்படியே ஒலிபெயர்ப்புச் செய்து பயன்படுத்த வேண்டும்.

எடுத்துக்காட்டாக:

1. Clinical genetics : மருத்துவ நோய் இயல்.
   மரபுரிமை பற்றி ஆராயும் துறை.
2. Ecology : சூழ்நிலையியல்.
   உயிரினங்கள் ஆகியவற்றிற்கும் சூழ்நிலைக்கும் இடையே உள்ள தொடர்புகளை ஆராயும் துறை.
3. Electro biology : உயிர் மின்னியல்.
   உயிரியலில் நடைபெறும் மின் நிகழ்வுகளை ஆராயும் துறை.
4. Electro chemistry : மின் வேதியியல்.
   வேதி மாற்றங்களுக்கும் மின் திறனுக்கும் இடையே உள்ள தொடர்பினை ஆராயும் துறை.
5. Electro-acoustics.மின் ஒலியியல் : மின் ஒலி பற்றி ஆராயும் துறை.

இப்படிச் சரியான குறியீடுகளை அப்படியே பயன்படுத்தித்தான் அறிவியலில் கலைச்சொற்களை அமைக்கின்றனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் டாக்டர் பிஷ்கிரீன்தான் மருத்துவத்துறையில் தமிழ்ச்சொற்களை வடிக்கத் தொடங்கினார். இவர் கலைச்சொற்களைத் தேர்வுசெய்ய சில வழிமுறைகளையும் தேர்ந்தெடுத்துக் கொண்டார். பரிதிமாற்கலைஞரும் கலைச்சொல்லாக்கத்தில் ஒரு மிகப்பெரிய பங்கினை வகித்துள்ளார். "Green House" என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச் சொல்லாகப் "பசுமை வீடு" என்று பயன்படுத்தியிருக்கிறார்."Green House" என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச்சொல்லாகப் "பச்சை வீடு" என்றே பயன்படுத்தி இருக்கலாமே என்ற கேள்வி எழும்போது, சொல்லாக்கத்தில் மொழிபெயர்ப்பு மட்டும் ஒரு முக்கியமான கூறு அல்ல, பொருள் பெயர்ப்பும் ஒரு முக்கியமான கூறு தான் என்று அருமையாக விளக்கம் அளிக்கிறார்.

அதுபோல் ஒரு கூட்டுச்சொல் பயன்படுத்தும் போது புணர்ச்சி விதிப்படி சரியாக ஒரு சொல்லை அமைக்கும் போதுதான் அது எக்காலத்திலும் பிழையின்றி அமையும். சென்னை அண்ணா பல்கலைக் கழகத்தில் 1995ஆம் ஆண்டு நிறுவப்பட்ட அறிஞர் குழுவினர் கணினித்துறை தொடர்பான கலைச் சொற்களைத் தமிழாக்குவதில் சிறப்புடன் செயல்பட்டுள்ளனர்.

1996ஆம் ஆண்டில் சாமி சமுகம் என்பவர் 17,000 மருத்துவச் சொற்களைத் தமிழாக்கியுள்ளார். வள்ளுவர் வள்ளலார் வட்டம், நொதுமம் தமிழாய்வு நடுவம், கார்க்கி ஆராய்ச்சி நிறுவனம் எனப் பல அமைப்புகள் இன்று கலைச்சொல்லாக்கத்தின் இன்றியமையாமை கருதிப் பல கலைச் சொற்களை உருவாக்கி வருகின்றன.

எல்லா உணர்வுகளையும் தமிழிலேயே வெளிப்படுத்தக் கலைச்சொல் ஒரு ஆகச் சிறந்த வழியை அளித்திருக்கிறது. இன்று கலைச்சொல் உருவாக்குவதில் மாணவர்களின் பங்கு பெரிதளவு தேவைப்படுகிறது.

இன்றைய மாணவர்கள் பலர் கலைச்சொல்லாக்கத்தில் ஈடுபடும் போது தமிழ் மொழியின் வளர்ச்சி பன்மடங்காகும். அடுத்த தலைமுறையும் அதிக ஈடுபாடு கொண்டு கலைச்சொல்லாக்கம் செய்வதை தங்களுடைய முயற்சிகளோடு முன்னெடுப்பர்.புதிய தொழில்நுட்பங்களிலும் தமிழின் பெருமை பேச இன்றைய மாணவர்களின் முயற்சி இன்றியமையாததாகும். ■



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு:




# றொபேர் அகராதியின் ஆன்மா நினைவுநாள்




ஆலன் றே : 1928 - 2020.

உலகின் இரண்டாவது மொழியான பிரெஞ்சின் நவயுக அகராதி நிறுவனங்களில் பெயர் பெற்றவை (le) Larousse லறூஸ், (le) Robert றொபேர் என்கிற நிறுவனங்கள். றொபேர் அகராதிகளின் "ஆன்மா"வாக இயங்கியவர் பெரும் மொழியியலாளரான Alain Rey ஆலன் றே, பெண் அகராதியியலாளர்கள் இருவரை மணம்புரிந்தார். கனவும் நினைவும் அகராதி, அகராதி என வாழ்ந்த இவர், தனது 92ஆவது அகவையில் 28.10.2020 அன்று பாரிசில் மறைந்தார்.

றொபேர் அகராதிகள், மற்றய அகராதிகளிலும் பார்க்க காலத்துக்கேற்ப சிறுவர், பெரியவர்களுக்காகத் தொகுக்கப்படுகின்றன. கூடுதலான சொற்களுடன், வரைவிலக்கணம் திருத்தியதாய்ப் புதுச்சொற்புனைவுடன், பிறமொழிச் சொற்களும் அடங்கிய விளக்கப்படங்களுடன் கெட்டியான வண்ணவண்ண அட்டைகொண்ட, ஆண்டுதோறும் ஜூனில் வெளிவரும் சொற்புத்தகங்களாக விளங்குகின்றன. மின்னகராதிகளும் உருவாக்கப்பட்டுப் பயன்பாட்டில் உள்ளன.

மொழியியலாளராக, அகராதியியலாளராக, எழுத்தாளராக, நூலாசிரியராக மட்டுமல்லாமல் பிரெஞ்சு மொழியின் காவலராகவும் வாழ்ந்த றே அவர்கள் றொபேர் நிறுவனத்தில் 1952ஆம் ஆண்டிலிருந்து 2020ஆம் ஆண்டுவரை பல்வேறுவகைப்பட்ட புதிய புதிய அகராதியியல் கோட்பாடுகளும் உத்திகளும் கொண்ட அகராதிகளைத் தொகுத்து வரலாற்றுச் சாதனை படைத்தார்.

இவரது அயராத உழைப்பில் இந்நிறுவனத்துத் தலைச்சன் அகராதி 1964 இல் வெளிவந்த்து. தொடர்ந்தேர்ச்சியாக 10க்கும் மேற்பட்ட பேரகராதிகளையும் தொகுத்தளித்து, நாற்பதுக்கும் அதிகமான நூல்களை எழுதி சாதனை படைத்து, மோலிளரின் (பிரெஞ்சுச் சொல்வளத்திற்கு பலமூட்டி உலவிய நாடகாசிரியர்) மொழிக்கு உலகளாவிய பெருமை சேர்த்தவர். ■



# பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் 01.10.2021ஆம் நாள் சிறப்பாகத் தொடங்கப்பெற்று நடைபெற்றது. இதில் அயல்நாட்டு அறிஞர்கள் மூவரும், உள்நாட்டு அறிஞர்கள் இருவரும் என மொத்தம் 5 அறிஞர்கள் 20 தமிழ்க் கலைச்சொற்கள் வீதம், பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

மொழிக் கலப்பைத் தவிர்ப்பதே மொழி வளர்ச்சிக்கான முதல்படி. தமிழில் பிறமொழிச்சொற்கள் கலப்பதைத் தவிர்ப்பதற்கு, நாள்தோறும் பெருகிவரும் பலதுறை சார்ந்த பிறமொழிச் சொற்களுக்கு இணையான கலைச்சொற்களை உருவாக்கி மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரவேண்டிய தேவை உள்ளது. அப்பணியை இவ்வியக்ககத் தமிழ்க் கலைக்கழகம் செய்துவருகிறது. இருப்பினும் புறநிலையில் உள்ள சொல்லாக்க அறிஞர்களின் துணையோடும் தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது.

01.10.2021ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் வரவேற்பு மற்றும் நோக்கவுரையாற்ற, பயிலரங்கத்தினைத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் தூயதமிழ் சொல்லாக்க அகரமுதலித்துறையின் முதன்மைப் பதிப்பாசிரியர் திரு.ப.அருளி அவர்கள் தொடங்கி வைத்துச் சிறப்பித்தார்.

பயிலரங்கில், பாரிசு பன்னாட்டு உயர் (கல்வி) தமிழாய்வு நிறுவனத்தின் இயக்குநர் பேரா. முனைவர் ச.சச்சிதானந்தம், நார்வேவாழ் இயந்திரப் பொறியாளரும், வள்ளுவர் வள்ளலார் வட்டத்தைச் சேர்ந்தவருமான மின்னச்சன் திரு. இங்கர்சால், மலேசிய தமிழ்மொழிக் காப்பகத்தின் கலைச்சொல்லாக்கக் குழு துணைத்தலைவர் திரு. இரா.திருமாவளவன், புதுச்சேரியைச் சேர்ந்த ஆய்வறிஞர் முனைவர் கு. சிவமணி, சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் கு. அரசேந்திரன் ஆகிய ஐந்து சொல்லாக்க வல்லுநர்கள் கலந்துகொண்டு கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரைவழங்கினர்.

அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர்



ப.அருளி



கு.சிவமணி



ச.சச்சிதானந்தம்



கு.அரசேந்திரன்



இங்கர்சால்



இரா. திருமாவளவன்

முனைவர் வே.கார்த்திக் நிகழ்வுகளை நெறிப்படுத்த, நிறைவாக பதிப்பாசிரியர் முனைவர் மா.பூங்குன்றன் அவர்கள் நன்றியுரையாற்றினார். குவியம் செயலிவழி நடைபெற்ற இப்பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்க நிகழ்வுகள் சொற்குவை வலையொளிப் பக்கத்திலும் நேரலை செய்யப்பெற்றது. சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன. வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கத்தினை நடத்திடத் திட்டமிடப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

## அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

### முனைவர் ச.சச்சிதானந்தம்

Accepted Usage - ஏற்புடை வழக்கு
Babling - குதலை
Arrangement of Entries - சொற்பதிவு வரிசை
Affective meaning - உணர்பொருள்
Auditory image - உணர்வொலி வடிவம்

### திரு.இரா. திருமாவளவன்

Virus - நச்சில்
Self monitor - தற்காணிப்பு
Project soli - விரலசைச் செயன்மம்
Hashtag - பரவுக்குறி (பரவி)
Nanotecnology - நுணவநுட்பியல்

### திரு. இங்கர்சால்

Minimalist - நுண்நுகர்வர்
Snapchat - படப்பேச்சு
Tracking - தடங்காணல்
FAQ - சுழல்வினாவிடை
GIF - நொடியசைப்படம்

### முனைவர் கு.சிவமணி

Abolish - ஒழித்தறவுசெய்
Abrogate - வழக்கறவுசெய்
Cancel - அறவுசெய்
Occupation - வாழ்(க்கைத்)தொழில்
Profession - பணித்தொழில் (தொண்டுடன் தொடர்புடையது)

### முனைவர் கு.அரசேந்திரன்

Mammals - மம்மு, மம்மா, மம்மினம்
Medal - மாழம்
Bedwetting - துயிலிழிநீர்
Amnesty - நன்னயச்சவை
Ambulance - காப்புந்து